கோவைத் தமிழ்ச் சங்கம். பிரசுரம்-1.



# ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கொங்கு நாடும்.



C. M. இராமச்சந்திர செட்டியார்,
B. A., B. L.,

1921.



(விலை அணா-12).

# முன்னுரை.



கோவைத்தமிழ்ச் சங்கத்தின்பால் 1920-ஹு ஜனவரி-மீ 14-உயில் "ஸ்ரீமத் சுந்தரமூர்த்திகளும் கொங்குநாடும்" என்ற விஷயமாய் ஒரு உபந்நியாசம் செய்தேன். உபந்நியாசங்கள் நிகழ்விப்பதோடு தமிழின் அபிவிருத்தியைக் கோரி நூல்களை இயற்றிவெளியிடுவதும் அச்சங்கத்தின் கொள்கைகளில் ஒன்றாதலால், அதற்கிணங்க அவ்வுபந்நியாசத்தைச் சிறிது விரித்தும் அதனோடு சிறிதுசேர்த்தும் ஒரு வியாசமாக எழுதி அச்சங்கத்தின் சார்பாக வெளிப்படுத்துகிறேன். இதில் பிழைகளும் அபிப்பிராய பேதங்களும் இருக்குமானால், அவற்றைத் திருத்திக்கொள்ளவும் குறித்துக் கொள்ளவும் என்றும் சித்தமாக இருக்கிறேன். இவ்விதமே ஏனைய அங்கத்தினர்களும் தம் வியாசங்களையும் நூல்களையும் அச்சங்கத்தின் வாயிலாக வெளியிட்டுச் சங்கத்தின் பெயரை நிலை நிறுத்துவார்கள் என்று நம்புகிறேன்.

கோவை
11—1—21 } ம. ரா.

# பொருள் அடக்கம்.



உ

சிவமயம்.

# ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கொங்குநாடும்.

---

## I.

முகவுரை:—ஒரு தேசத்தின் சரித்திரம் ஒழுங்காக ஏற்பட்டிருப்பது அத்தேச நாகரிகத்திற்கு ஒரு அறிகுறியாக எண்ணப்படுகிறது. அப்படித் தேசசரித்திரம் எழுதப்பட்டிருந்தால் அத்தேசத்தின் நாகரிகத்தை ஆட்சேபிக்க இடம் ஏற்படாது சரித்திரம் எழுதப்படாமலிருந்தால், அத்தேச மாந்தர்களுக்குத் தங்கள் நாகரிகத்தை நிலைநிறுத்தும் உத்தேசம் இருக்கும் பக்ஷத்தில் தங்கள் நாட்டு சரித்திரத்தை ஆராய்ந்து அறிந்து வெளிப்படுத்துவது அவர்கள் கடமை.

தற்காலக்கல்வி நமது தேசத்தில் புக ஆரம்பிக்கையில் இங்கு வந்த மேற்கத்திய நிபுணர்கள் நமது தமிழ் நாடுகளில் சரித்திரமும் சரித்திர ஆதாரங்களும் இல்லையென்று எண்

ளியிருந்தார்கள். பிறகு தமிழ்நூல்களைக் கண்டபோது அவைகள் வெறும் கதைகள் என்றும் சரித்திரபூர்வமாக நம்பத்தகாதவைகள் என்றும் தள்ளி இருந்தார்கள். பிறகு நமது நாட்டில் சரித்திர ஆராய்ச்சி விஷயத்தில் இச்சை கொண்ட கல்விமான்கள் ஊக்கம் கொண்டு ஆராய்ச்சிகள் செய்யவே, நமது நூல்களில் பலஆதாரங்கள் கிடைக்கின்றனவென வெளிப்படுத்தி அவ்வாதாரங்களைக் கொண்டு தேசசரித்திரத்தையும் ஒருவாறு தொகுக்க முயன்றிருக்கிறார்கள். யாதொரு பிரயோஜனமும் இல்லாதவையென்று மேற்கத்திய நிபுணர்களால் தள்ளப்பட்டிருந்த மதபுராணங்கள் ஸ்தலபுராணங்கள் இவைகளிலிருந்தும் இம்முயற்சிக்கு முக்கியமான ஆதரவுகள் கிடைக்கின்றன. இவைகளிலும்மற்ற நூல்கள் சிலா சாசகள் முதலியவைகளிலும் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டு சோழ, பாண்டிய நாடுகளின் சரித்திரப் பகுப்புகளை ஒழுங்காகத் திரட்டி சில கல்விமான்கள் நூல்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனால் நமது கொங்கு மண்டலத்திலோ, சிலா சாசனங்களைத் தேடி ஆராயாத குறைவினாலும், பழைய நூல்கள் கிடைக்காதிருப்பதினாலும், கிடைத்திருக்கும் தலபுராணங்கள் முதலிய நூல்களை ஆராயாமல் விட்டிருக்கும் வகையினாலும், இக்கொங்குதேசசரித்திரம் நாளது வரை ஒழுங்காக வெளி வரவில்லை. இனியாவது நம்நாட்டின்மீது அன்புள்ளவர்கள் இக்குறையை நீக்குவார்கள் என்பது நமது கோரிக்கை.

கொங்கு தேச சரித்திரத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் அத்தேசத்திற்கு விஜயம் செய்தது ஒரு முக்கிய சம்பவம் என்று எல்லாராலும் கொள்ளத்தக்கது. அச்சம்பவ காலத்

தில் இந்நாடு இருந்த தன்மையும் அப்போது நடந்த விஷயங்களும் ஆராய்வதற்கு வேண்டிய ஆதரவுகள் தமிழ்நூல்களில் கிடைக்கின்றன. அவைகளைக் கொண்டு இந்நாட்டின் உண்மையான சரித்திரப்பகுதியொன்றை அறியமுயல்வதுதான் இவ்வியாசத்தின் நோக்கம்.

ஆதரவுகள்—கொங்கு நாட்டில் ஸ்ரீமத் சுந்தரமூர்த்திகள் விஜயம் செய்த விஷயம் கூறும் நூல்களில் திருத்தொண்டர் புராணம் என்ற பெரியபுராணம் முக்கியமானது. மற்ற நூல்களில் தலபுராணங்களாகிய பேரூர்ப்புராணம், அவிநாசிப்புராணம், திருத்துடிசைப் புராணம், திருமுருகன்பூண்டிப்புராணம், இவைகளிலும் அவரது சரிதம் காணப்படும். இவைகளைத்தவிர, அவரது தேசசஞ்சாரத்தைக் குறித்த பல கர்ணபரம்பரை ஐதிகங்களும் பல பல இடங்களில் வழங்கி வருகின்றன. அச்சரிதங்களில் காணும் ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந்து அவைகளில் நமக்குத் தோன்றும் படிப்பினைகளைக் கவனிப்போம்.

---

## II.

கோங்கு நாடு:—கொங்கு நாட்டின் சரித்திரமே தெளிவாய்கிடைக்காததினால் அதன் எல்லையைப்பற்றிக் கல்விமான்களுக்குள் அபிப்பிராய பேதங்கள் ஏற்படுவது சகஜமே. இந்நாட்டு அரசு அடிக்கடி மாறினதாகவும், நாட்டு எல்லையும் அரசன் திறமைக்குத் தக்கபடி மாறினதாகவும் தெரிகிறது. இந்நாட்டைச் சுற்றிலும் இதைவிட பராக்கிரம தேசங்கள் ஏற்பட்டு அவைகள் ஆளுகைக்குள் அடிக்கடி அகப்பட்டு, யுத்தங்களில் நெருக்கடி பட்டு, யாதொரு விதஸ்திரமான நிலைமை யில்லாமல் இந்நாடு தத்தளித்துக் கொண்டிருந்தது. ஒரு காலத்தில் சேர சோழ ஆதிக்கங்களின் இடையில் சிக்கி அலைந்தது. பின்னொரு காலத்தில் மதுரை மைசூரார் ஆதிக்கங்களில் உளைந்தது. அந்தந்த அரசர்கள் தண்டெடுத்துச் சென்று சூறையாடும் பாதையாகவே இருந்து இந்நாடு வெகு காலம் சீர்குலைந்தது. இக்காரணத்தினால் தான் இதன் இராஜ வம்சாவளிகளும் அவர்கள் பராக்கிரமமும் கீர்த்தியும் காட்டும் சாசனங்களும் நூல்களும் காண்கிறதில்லை.

இக்கொங்கு நாடு எதுவரையில் பரந்திருந்ததென்று நாம் ஆராய்ந்தால்,

"வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு
குடக்கு வெள்ளிப் பொருப்புக்குன்று—கிழக்கு
குழித்தண் டலைசூழும் காவிரிநன் னாடா
குழித்தண்ட லையளவும் கொங்கு."

என்னும் ஒரு தனி வெண்பா நமக்குக் கிடைக்கிறது. இவ்வெண்பா எக்காலத்தில் யாரால் ஏற்பட்டது என்பதற்கு

தகுந்த ஆதாரம் இல்லை. எனினும் இவ்வெண்பா ஏற்பட்ட காலத்தில் கொங்கு நாடு வடக்கே சத்தியமங்கலம் தாலுக்காவிலுள்ள தலைமலை வரையிலும் கிழக்கே திருச்சிருப்பள்ளி ஜில்லா குழித்தலை, வரையிலும், தெற்கே மதுரை ஜில்லா பழனி (வைகாவூர்) வரையிலும், மேற்கே வெள்ளியங்கிரி வரையிலும் பரந்திருந்ததாகத் தெரிகிறது. ஆனால் பண்டைக் கால நூல்களையும் சில சிலா சாசனங்களையும் கவனித்துப் பார்க்கையில் இக்கொங்கு நாடு மேற் சொல்லிய எல்லையை விட அதிகமாகப் பரந்திருந்த தென்றே சொல்லலாம். கங்க பல்லவர்கள் அரசாண்ட தலைக்காடு இதற்கு இராஜதானியாய் இருந்ததென்றும் கொல்லி மலை இந்நாட்டு மலைகளில் ஒன்று என்றும் சொன்னால் இந்நாடு அதிகபரப்புடையது அல்லவா?

பூர்வ காலங்களில் உயர்ந்த மலைகளையும் ஆழ்ந்து அகன்ற நதிகளையும் தேச எல்லைகளாய்க் கொண்டிருந்தார்கள். இக்கொங்கு நாட்டிலும் அப்படியே அனுசரித்திருந்தார்கள். சுற்றிலும் உயர்ந்த மலைகளால் சூழ்ந்த ஒரு பீடபூமி என்றே இதைச் சொல்லலாம். இந்நாடு செழித்திருந்த காலத்தில் வடக்கே பிளிகிரிரங்கன், ஹோசூர் மலைகளும், கிழக்கே கொல்லி, ஜவ்வாது மலைகளும், தெற்கேவராக (பழனியும் கோடைக்கானலும்), ஆனைமலைகளும், மேற்கே அஸ்தகிரி (மேற்குத்தொடர்ச்சி மலை)யும், எல்லைகளாகக்கொண்ட அகன்ற தேசமே கொங்குநாடு எனப்பட்டது.

இந்நாட்டை இரண்டு பாகங்களாகப் பிரித்து வடக்கிலிருந்து தெற்கு முகமாகக் காவிரிநதியானது ஓடும். இந்நாட்டிற்கு யாதொருஜலவசதியும் கொடாமல் இதிலிருந்துஎல்லா சௌகரியங்களையும் எடுத்துக்கொண்டு போய்சோழநாட்டிற்கு

ஊட்டுவதாலே இந்நதியை கொங்கு நாட்டு நதியென்று ஒருவரும் சொல்வதில்லை. இதற்கு உபநதிகளாக, வானி (பவானி), காஞ்சிமாநதி (நொய்யல்), ஆம்பிராவதி, என்னும் ஆறுகள் இந்நாடு வழியே ஓடி அதனைச்சேருகின்றன. இந்நாடு சுப்பிரமணியக்கடவுள் சந்நிதிகளான பல சிறு குன்றுகள் அங்கங்கே கொண்டிருக்கும் சிறப்புவாய்ந்தது. மூவரால் பாடல் பெற்ற கொங்கேழு ஸ்தலங்களும், பேரூர், குரக்குத்தளி போன்ற வைப்புஸ்தலங்களும், பல அரசர்களாலும் சேரன்களாலும் சிலாலிகிதங்கள் வரையப்பெற்ற பலபுராதன ஆலயங்களும் கொண்ட பழைய நாடு இதுவே.

ஸ்ரீ சுந்தரமூர்த்திகள்:—இச்சிறந்த நாட்டில் சைவசமயாசாரியரில் ஒருவரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர் சைவசமயம்பரவச் செய்வதற்காக ஸ்தலங்கள் தோறும் சென்று தேவாரங்கள் அருளிச் செய்தபோது மூன்றுதரம் விஜயம் செய்து இருக்கின்றார். அவர் எழுந்தருளிய காலம் மதுரையில் வரகுணபாண்டியனும் கொடுங்கோளூரில் (சேரர் நகர்) சேரமான் பெருமாள் நாயனரும் சேதி நாட்டில் நரசிங்க முனையரும் அரசாண்ட சமயம். அது சுமார் *கி. பி 850 என்று இப்போது கணிக்கப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் தென்னிந்தியா மிகுந்த குழப்பம் அடைந்திருந்தது. காஞ்சி பல்லவர்கள் க்ஷீணமடைந்திருந்தனர். சோழர் ஆதிக்கம் ஆரம்பிக்கவில்லை. பாண்டியன் சிறிது வெற்றியடைந்தும் பின்னடைந்தான். வடக்கே சாளுக்கிய அமோகவர்ஷன் சிறப்போடு அரசாண்டான். அவன் ஆதரவால் கொங்கு

---

* சுந்தர மூர்த்திகள் காலத்தைப்பற்றி அனுபந்தத்தில் பார்க்க:—

நாட்டை ஆண்டு வந்த தலைக்காட்டுக்காரங்கேயர்கள் (கங்க பல்லவர்) சிறிது சுதந்திரத்துடனும் அமைதியுடனும் வாழ்ந்து வந்தார்கள். ஆகையால் சுந்தரமூர்த்தி நாயனார் கொங்கு நாட்டில் செய்த விஜயங்கள் தடைகள் நேரிடாமல் அமைதியுடன் நிறைவேறின எனச்சொல்லலாம்.

---

## III.

சரித்திர வரலாறுகள்:—மேற்குறித்த வண்ணம் ஸ்ரீமத் சுந்தரமூர்த்திகள் கொங்கு நாட்டில் செய்த விஜயங்களைப்பற் றிப்பல நூல்கள் கூறியுள்ளபோதிலும், பெரியபுராணமே அவர் சரித்திரம் முழுவதும் விரிவாகக் கூறுகிறதினால் அதன் வரலாறேநம் ஆராய்ச்சிக்குத் தகுந்த சாதகமாயிருக்கும்; ஆதலால் அதன்படியுள்ள சரித்திரத்தை த முதலில் நாம் கவனிப்போம்.

1. பெரியபுராணம்:—தமிழ் நிலமாகிய இத்தென்னாட் டைச் சேர்ந்த திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரில் ஆதிசைவ குலத்தில் சடையனாருக்கும் அவர் மனைவியாரான இசைஞானியாருக்கும் புதல்வராய் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவா மிகள் அவதரித்து, 'நம்பியாரூரர்' என்ற பிள்ளைத்திரு நாமம் பெற்று வளர்கையில், பிள்ளைப்பருவத்தே அந்நாட்டு அரசர் நரசிங்க முனையரால் அபிமான புத்திரராய்க் கொள்ளப் பெற்று கல்வி கற்று சகல கலைகளிலும் வல்லவராயினர். சுவா மிகளுக்கு 'மணப்பருவம் வரவே, தந்தையார் தம்மரபிற் கேற்ப புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாருடைய புதல்வியை அவருக்கு மணம் பேசுவித்தார். பின்பு மண முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டு, அந்நாள்நமது சுவாமிகள் புத்தூரில் மண ப்பந்தரில் மணக்கோலத்துடன் வீற்றிருக்கையில், சிவபெரு மான் அவரைத் தடுத்தாட் கொண்டருளும் பொருட்டு ஒரு வயோதிகராய் எழுந்தருளி வந்து மணப்பந்தர் புகுந்தார். அங்கு இருந்த சுந்திர மூர்த்திகளை நோக்கி, அவர் மீது தன க்கு ஒரு வழக்கு உண்டு என்றும் அதைத்தீர்த்த பிறகு தான்

மணம் புரிய வேண்டும் என்றும் எடுத்துக்கூறி அங்கு மணம் நடப்பதைத் தடுத்தார். அங்கிருந்த சபையோர் அவ்வழக்கு என்ன என்று வினவவும், அம்முதியோர் அன்று மணம் புரியவிருக்கும் சுந்தரமூர்த்திகள் தமக்குப் பரம்பரையான அடிமை என உரிமை பாராட்டி வெண்ணெய்நல்லூர் சபையோர் முன் அதனை ஒரு ஓலை காட்டி நிரூபித்தார். சுவாமிகளும் அதனை ஏற்றுக் கொண்டு அவர்பின் செல்லவே அவ்வயோதிகர் வெண்ணை நல்லூர் சிவாலயத்தின் உட்சென்று மறைந்து ஆகாயவீதியிலே காட்சிதந்தருளினர். உடனே சிவபிரானே தன்னை ஆட்கொண்டருளிய அருளாளர் என்பதுணர்ந்து அவரது பெருங்கருணைத்திறத்தை வியந்தவராய்ப் பெருமானுடைய ஆக்ஞையின்படி "பித்தா பிறை சூடி" எனத்தொடங்கும் தேவாரத் திருப்பதிகத்தால் எம்பெருமானை சுவாமிகள் துதித்தார். பிறகு அவர் பல சிவஸ்தலங்கள்தோறும் சென்று பதிகங்கள் பாடித் திருவாரூர் நகரடைந்தார். அந்நகரிலிருக்கையில் பரவை நாச்சியார் மணம் நடந்தேறியது. பின்னர் தேவாசிரிய மண்டபத்தில் சிவனடியார்களைத் தொழுது "திருத்தொண்டத்தொகை" பாடினர். அந்நகரை விட்டுச் சோழநாட்டுத் திருப்பதிகளைத் தரிசித்துச் சென்ற சுந்திர மூர்த்திகள் திருப்பைஞ்ஞீலி முதலிய ஸ்தலங்களை வணங்கித் திருஈங்கோய் மலையைப் பணிந்து பின் அங்கிருந்து காவிரி தாண்டிக் கொங்கு நாடு புகுந்தார்.

**முதல் விஜயம்.**

கொங்கு நாட்டில் காவேரிக்குத் தென் கரையில் கறையூர் எனப்பெயர் கொண்ட திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் ஸ்தலத்திற்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சென்று சிவபெருமானை

வணங்கி உள்ளத்தில் அன்பு பெருக ஈசனை மறக்க ஒண்ணு ஆர்வத்தினால்,

"மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேனினிப் பிறவாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே."

என்று தொடங்குவதாகிய "உலகெலாம் உய்ய உறுதியாம் பதிக" மாகிய பஞ்சாட்சரத் திருப்பதிகத்தை அருளினார். பின்பு அந்நகரை விட்டு நீங்கிப,

"பாங்கு நற்பதிகள்
பலவுமுன் பணிந்து பரமர்தாள் போற்றிப்
போந்துதண் பணிமலர்ப் படப்பை
குலவுமீ கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்
குறுகினார் முறுகுமா தரவால்"

(பெரிய புராணம், ஏயர்கோன்-88)

என்றபடி கொங்கு நாட்டுத் திருப்பதிகள் பலவும் சென்று திருப்பேரூரை அடைந்தார். அங்கே சிவபெருமான் தில்லைக் கனகசபையில் நடனஞ் செய்யும் அற்புதத் திருக்கோலத்தை தமக்குக் காட்டக் கண்டு பேராநந்தப்பெருங்கடலில் மூழ்கி னவராய் நமது சுவாமிகள் உள்ளம் மகிழ்ந்து தேவாரம்பாடி

அத்திருப் பதியை யணைந்துமுன் றம்மை யாண்டவர்
கோயிலுட் புகுந்து,
மெய்த்தவர் சூழ வலங்கொண்டு திருமுன் மேவுவார் தம்
மெதிர் விளங்க,

யருளினார். பின் சிதம்பரம் செல்ல எண்ணினவராய் அந்நகர் விட்டுப் புறப்பட்டுச் சுரங்களும் நதிகளும் பல பல

---

நின்றனர் தில்லை மன்றினின் றாட னீடிய
கோலநேர் காட்டக்,
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக் கலுழிநீர்
பொழிதரக்கண்டார். (பெரிய புராணம் ஏயர்கோன்-89)

காண்டலுந் தொழுது வீழ்ந்துட னெழுந்து கரையிலன்
பென்பினை யுருக்கப்
பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம் புணர்ந்துமெய்
யுணர்வினிற் பொங்கத்
தாண்டவம் புரியுந் தம்பிரா னாரைத் தலைப்படக் கிடைத்த
பின் சைவ
வாண்டகை யாருக் கடுத்தவந் நிலைமை விளைவையாள
வறிந் துரைப்பார். 90

அந்நிலை நிகழ்ந்த வாரருள் பெற்ற வன்பரு ரின்ப
வெள்ளத்து
மன்னிய பாடன் மகிழ்ந்துடன் பரவி வளம்பதி யதனிடை
மருவிப்
பொன்மணி மன்று ளெடுத்தசே வடியார் புரிநடங் கும்பி
டப் பெற்று
லென்னினிப் புறம்போ யெய்துவ தென்று மீண்டெழுந்
தருளுதற் கெழுவார் 91

ஆயிடை நீங்கி யருளினார் செல்வா ரருவரைச் சுரங்களும்
பிறவும்
பாயுநீர் நதியும் பலபல கடந்து பரமர்தம் பதிபல
பணிந்து

கடந்து திருப்பதிகள் பல பணிந்து பாடல்கள் பாடி வெஞ்சமாக்கூடலைச் சார்ந்தார். *அங்கே ஈசனைப் பணிந்து, சோழநாடு புகுந்து பல பதிகளைத் தரிசித்துச் சிதம்பரம் போய்ச்சேர்ந்தார். அங்கே ஸ்ரீ சபாநாதரைத் தரிசித்துத் தாம் பேரூரிலே கண்ட நிலையைச் சிறப்பித்து "மடித்தாடும் அடிமைக்கண்" என்னும் பதிகத்தில்

"பாரூரு மரவல்கு லுமைநங்கை யவள் பங்கன் பைங்க
  ணேற்ற
னூரூரன் றருமனார் தமர் செக்கி லிடும்போது தடுக்
  தாட்கொள்வா
னாரூரன் றம்பிரானாரூரன் மீகொங்கிலணி காஞ்சி
  வாய்ப்
பேரூர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே
  பெற்றா மன்றே"

என அருளிப்பாடினார். இது தான் சுந்தர மூர்த்திகளின் கொங்கு நாட்டு முதல் விஜய வரலாறு.

---

மேயவண் டமிழால் விருப்பொடும் பரவி வெஞ்சமாக்
  கூடலும் பணிந்து
சேயிடை கழியப் போந்தவர் தடைந்தார் தென்றிசைக்
  கற்குடி மலையில் 92

* சுவாமிகள் வெஞ்சமாங் கூடலில் பாடிய தேவாரம்:—

"எறிக்கும் கதிர் வேய் உதிர் முத்தம் ஓடு ஏலம் இலவங்கம்
  தக்கோலம் இஞ்சி
செறிக்கும் புனலுள் பெய்து கொண்டு மண்டித்திளைத்
  தெற்று சிற்றாறதன் கீழ் கரை மேல்

பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமிழ் நாட்டுத்திருப்

இரண்டாவது விஜயம்.

பதிகள் பல சென்று பதிகங்கள் பாடித் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து அவ்விடம் சிலகாலம் இருந்து திருவாரூரை நினைந்து புறப்பட்டார். அவ்வாறு செல்கையில் தாம் சபதம் தவறிய காரணத்தால் கண்கள் இழந்து, காஞ்சியில் ஒரு கண்ணும் திருவாரூரில் மற்றொரு கண்ணும் அருளப்பெற்றார். அங்கு பரவை நாச்சியாருடைய ஊடலை ஈசனருளால் நீக்கப்பெற்று பலஸ்தலங்கள் தரிசித்து விட்டுப் பின்பும் அந்நகரிலேயே சிலகாலம் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது சேரநாட்டுக் கொடுங்கோளூரில் அரசு புரிந்துகொண்டிருந்த ஸ்ரீ சேரமான் பெருமான் நாயனர் ஸ்ரீ சுந்தரமூர்த்திகளுடைய பக்தி மகிமையைக் கேட்டறிந்து அவரை தரிசிக்க விரும்பித் திருவாரூரையடைந்தார். ஸ்ரீ சுந்தரமூர்த்திகளும் சேரமான் பெருமானை மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு உபசரித்து அவருடன் நட்புரிமை பூண்டார். சில நாள் கழிந்த பின்னர் சேரமான் பெருமாள் சுந்தர மூர்த்திகளை சேரநாட்டுக்கு எழுந்தருளும்படி வேண்ட அவரும் அதற்கிசையவே அவ்விருவரும் புறப்பட்டுச் செல்லுகையில் திருவையாற்றில் காவிரி நீர் பிரிந்து தமக்கு வழி விடும்படி ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் திருப்பாடல் பாட அவ்வண்ணமே

முறிக்கும் தழைமா முடப்புன்னை ஞாழல் குருக்கத்தி
கண்மேற் குயில் கூவலரு
வெறிக்கும் கலைமா வெஞ்சமாக்கூடல் விகிர்தா
"அடியேனையும் வேண்டுதியே"

என்பதை முதலாக உடைய திருப்பதிகம்

யாகக் காவிரி கடந்து மேற்றிசை நோக்கிக் கொங்கு நாடு புகுந்தார்கள். அந்நாட்டைக் கடந்து மலைநாடு செல்லவே அங்குள்ளார் அவர்களை எதிர்கொண்டு உபசரிக்கப்பெற்று கொடுங்கோளூர் சென்று சேர்ந்தார்கள். அங்கே ஸ்ரீ சுந்தர மூர்த்திகள் சில நாள் வசித்திருந்து பின் ஸ்ரீ சேரமான் பெருமாள் பெரும் பொருள் தரப்பெற்று அவரிடம் விடை பெற்று மலை நாடு விட்டு நீங்கினார். வழியில் சுற்சுரங்களையும் கான்யாறுகளையும் நெடுங்கானல்களையும் கடந்து கொங்கு நாட்டுத்திருமுருகன் பூண்டியின் வழியே சென்றார். அவ்வாறு செல்கையில் சிவபெருமான் ஏவலினால் கணங்கள் வேடுவராய் வந்து சுந்தர மூர்த்திகள் கொண்டேகும் பொருள்களைப்பரிசனங்களிடமிருந்து வழி பறித்தார்கள். சுவாமிகளும் திருமுருகன் பூண்டியடைந்து திருக்கோவிலுட்புகுந்து எம்பெருமானை வணங்கி,

> "கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
> திடுகு மொட்டெனக் குத்திக் கூறை கொண்டாறலைக்கு மிடம்
> முடுகு நாறிய வடுகர் வாழ் முருகன் பூண்டிமா நகர்வாய்
> இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடு மெத்துக்கிருந்தீ
> ரெம்பிரா னீரே"

என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியருள கடவுள் திருவருளினால் அவ்வேடுவராகிய கணங்கள் பறித்த பொருள்களெல்லாம் கோயில் வாயிலிற் கொண்டு குவித்தார்கள், சுவாமிகள் அவ்வண்ணம் பெற்று அந்நகர் நீங்கிக் கொங்கு நாடு கடந்து திருவாரூரடைந்து அங்கே இனிதிருந்தார் இது தான் கொங்கு நாட்டில சுந்தர மூர்த்திகள் செய்த இரண்டாவது விஜயம்.

மூன்றாம் விஜயம்.

சிலநாள் சென்றபின் ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமானாயனாரைக்காண ஆவல்கொண்டார். அதற்காக மலைநாடு செல்லக்கருதி கொங்குநாடு கடக்கையில் திருப்புக்கொளியூர் அவிநாசி சேர்ந்தார். அவ்வூரினுள்ளே போகும் போது ஒரு வீதியிலே ஒரே காலத்திலே ஒரு மனையில் மணவொலியும் ஒரு மனையில் அழுமொலியும் எழக் கேட்டு நாயனார் "இவ்விரண்டொலியும் ஒருங்கு நிகழ்வது என்னை" என வினவ, சில வருஷங்களின் முன் ஒரு மடுவிற்குக் குளிக்கச் சென்ற இருமக்களில் ஒருவனை ஒரு முதலை விழுங்கியதும் மற்றவன் தப்பி வீடு வந்ததும் தப்பினவனுக்கு அப்போது அவன் மனையில் உபநயனம் நடப்பதும் அதனைக்கண்டு இறந்தவன் வீட்டில் அழுகை உண்டாவதும் முதலான விஷயங்கள் வெளியாயின. அவற்றைக் கேட்டறிந்த நாயனார் அவ்விறந்த புதல்வனைப் பிழைப்பிக்கத் திருவுளம் கொண்டு மடுவை அடைந்து எம்பெருமான் மீது "எற்றான் மறக்கேன்" எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினார். அதனில்,

உரைப் பாருரையுகந்துள்க வல்லார் தங்களுச்சியாய்
அரைக் காடரவா வாதியுமந்தமு மாயினாய்
புரைக் காடு சோலைப் புக்கொளியூ ரவிநாசியே
கரைக் கான்முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

என்ற நான்காம் திருப்பாட்டு முடிவதற்குள் அம்மடுவிலிருந்த முதலை முன் விழுங்கின பிள்ளையை அன்றுவரை சென்ற வயதும் நிரம்பக் கரையில் உமிழ்ந்தது. பிள்ளையை திரும்பப் பெற்ற பெற்றோர் சுவாமிகளை தொழவும் அவர் அவிநாசியீசனைத் துதித்து அப்பிள்ளைக்கும் உபநயனம் புரி

வித்தார். பின்னர் கொங்குநாடு நீங்கக் குடபுலத்துச்சிவனார் அடியார் பதிகள் தோறும் மகிழ்வுற்று கானகமும், கான்யாறும், கற்சுரமும் கடந்தருளி மலைநாடு புகுந்தார். அவ்விடமே சுவாமிகள் சேரமான் பெருமான் நாயனாருடன் சில காலம் அளவளாவி இருந்து பின்னர் இரண்டு பரம பக்தர்களும் சிவபெருமான் திருவருளால் திருக்கைலாசம் அடைந்தனர். இதுதான் சுந்தரமூர்த்திகள் கொங்குநாட்டில் மூன்றுவதாக வும் இறுதியாகவும் செய்த விஜயம்.

இதுகாறும் கூறின வரலாறு தான் நமக்குக் கிடைக்கக் கூடியவற்றிலெல்லாம் முதன்மையானது. அநபாயச் சோழர் எனப் பெயர் கொண்ட குலோத்துங்கச் சோழன் முதலாவதவன் (கி. பி. 1053–1117) காலத்தில் அவருடைய இராஜாங்கத்தில் முக்கிய மந்திரித் தொழில் பூண்டிருந்த ஸ்ரீமத் சேக்கிழார் நாயனார் மேற்கண்டவாறு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திரத்தை தாம் அருளிச்செய்த பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துக் கூறியிருக்கின்றனர். அதாவது சுந்தரமூர்த்தி சுவாமிகள் இருந்த காலத்திற்குச் சுமார் முந்நூறு வருஷகாலத்துள் மேற்கூறிய அவரது சரித்திர விருத்தாந்தம் எழுதப்பட்டது எனலாம். அதை எழுதினவரோ இராஜாங்கத்தில் ஒரு பெரிய பதவி கொண்டவரும் சரித்திர விஷயங்களை எளிதில் ஆராய்ந்து வரைவதற்கு வேண்டிய சாதனங்களைக் கொண்டவரும் ஆன ஒரு பெரும் புலவர் சிகாமணி. அவரது பெரிய புராணமோ, தமிழ்ப் பாஷையில் பெரும்பாலும் கிடைக்கக் கூடியதும் வெற்றுரைகளையும் நம்பத்தகாத

6515



கட்டுக் கதைகளையும் கொண்டதுமான வேறு நூல்களைப் போல் அல்லாது, பல சரித்திர உண்மைகளை உள்ளவாறு எடுத்துக்கூறும் உன்னதமான ஒரு நூல். இதைத் தற்காலச் சரித்திர நிபுணர்கள் தென்னிந்திய சரித்திரத்தை எழுதுவதற்கு ஒரு பிரதம ஆதாரமாக எடுத்தாளுகின்றனர். சரித்திரம் நடந்த சுமார் முந்நூறு வருஷங்களுக்குள் ஒரு பெயர் பெற்ற சரித்திரப் பெரும் புலவரால் தம் உள்ளத்தெழுந்த உயர்ந்த பக்தி மேலிட்டு உலகத்தில் ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகளின் சரிதத்தை பரவச்செய்ய வேண்டும் என்ற உன்னத நோக்கினாலும் ஆசையினாலும் அது பாடப்பட்டதென்றால், அந்த வரலாறு தான் உண்மையான அம்சங்களைக் கொண்டதென்றும், அது தான் நாம் நம்பி ஆதாரமாய்க் கொள்ளத் தக்கதென்றும் சொல்லவும் வேண்டுமா? அத்தன்மையான இவ்வரலாற்றை முதன்மையாகக் கொண்டு, வேறு நூல்களில் கூறப்பட்டிருக்கும் அவரது வரலாறுகளை இதனுடன் ஒப்பிட்டு அதனால் நமக்குத்தெரியவரும் ஒற்றுமை வேற்றுமைகளை இனிக்கவனிப்போம்.

2. பேரூர்ப்புராணம்:— காலக்கிரமத்தில் பெரியபுராணத்திற்கு இரண்டாவதாக நாம் கொள்ளக்கூடியது பேரூர்ப் புராணம். அதில் ஸ்ரீ சுந்திரமூர்த்திகள் கொங்கு நாடு அடைந்தவிஷயம் அடியிற்கண்டவாறு கூறப்பட்டிருக்கிறது.

சுந்தரமூர்த்தி நாயனார் வெண்ணெய் நல்லூரில் சிவபிரானால் ஆட்கொள்ளப் பெற்றுத் தெற்கே பல திருப்பதிகள் தரிசித்துச்சென்று திருவாரூரை அடைந்து அங்கே பரவையாரை மணந்து, திருத்தொண்டத்தொகை என்னும் பதிகம்

பாடிப்பின் மேற்காக பல சிவஸ்தலங்கள் தரிசித்துக் கொண்டே கொங்கு நாட்டில் கொடுமுடி அடைந்தார். அங்கே அவ்வூர் ஈசனை வழுத்திப் பின் மேற்கே சென்று காஞ்சிவாய்ப் பேரூரை அணுகினார். அத்திருப்பதி வாழும் அடியார்கள் "தம்பிரான் தோழர் வந்தார்" எனக் கொண்டாடி ஊர் அலங்கரித்து அவரை எதிர் கொள்ளவே சுந்தர மூர்த்திகளும் அவர்களுடன் அளவளாவியிருந்து காஞ்சிநதியில் நீராடி திருக்கோயில்புகுந்தார். ஆனால் அவர் வருவதற்கு முன்பே சிவபெருமான் ஒரு திருவிளையாட்டை முன்னிட்டு உயர்ந்ததும் இழிந்ததும் ஆனவெல்லாம் தானே என்று மறை ஓதுவதை நிரூபிக்க முன்னர் வேதியனுய் வந்ததுபோலத் தானே இப்போது ஒரு பள்ளனும் தேவியார் ஒரு பள்ளியாகவும் உருவெடுத்து, உழுதல் நடுதல் முதலிய மழவர் தொழிலைப்புரிந்து கொண்டிருந்தனர். பெருமானை கோயிலில் காணப்பெறுமல் நாயனார் நந்தீசனை வினவவே, அவர் ஈசனால் முன்னமே சொல்லக்கூடாதென்ற கட்டளை இடப்பெற்றவராயிருந்ததினால், யாதொன்றும் கூறுமல் தன் பார்வையை மட்டும் அத்திக்கிலே செலுத்த அக்குறிப்பை உணர்ந்த ஸ்ரீமத் சுந்தரமூர்த்திகள் அவ்வழியே சென்று அங்கே வயலிடத்தே சுவாமியையும் தேவியையும் கண்டு வணங்கினர். சிவபெருமான் நாயனாரோடு கரையேறி ஆலயம் அடைந்து, தம் கட்டளை தவறின குற்றத்திற்காக நந்தியின் முகத்தைச் சேதித்து, வெள்ளியம்பலத்தில் திருநடனம் புரிந்தார். அதனை தரிசித்து மகிழ்ந்த நாயனார் பொன் தரும்படி கேட்கவும், கொடாமல் சிவபிரான் "உனது பாட்டிற்கு நமது ஆட்டே பரிசு; இது முத்தி ஸ்தலம், ஆகையால் மற்றைய ஸ்தலங்களில் பொன் தருவோம்; சேரமானுக்கு

என்று செய்தி தெரிவித்தோம்; அவன் தருவன்" என அருளிச்செய்தார். பின்னர் நாயனார் விடை பெற்று பூலஸ்தலங்களையும் தரிசித்துச் சிதம்பரம் செல்ல, அங்கு பொன்னம்பலத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமான் பேரூரில் காட்டிய தரிசனம் காட்டவே, அதனை "பேரூர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே" எனச் சிறப்பித்துப் பாடினார்.

பிறகு சோழ நாடு, நடு நாடு, தொண்டை நாடுகளில் உள்ள திருப்பதிகளைத் தரிசித்துத் திருவாரூர் சென்ற நாயனார் அங்கு சேரமான் பெருமானைச் சந்தித்து அவருடன் நட்புரிமை பூண்டு திருவஞ்சைக் களம் சேர்ந்து அங்கு சில நாளிருந்து சேரமான் பெருமானிடம் பெரும் பொருள் பெற்றுத் திரும்பும் வழியில் பரி கொடுத்துத் திருமுருகன் பூண்டியில் அதனை மீண்டும் பெற்றுத் திருவாரூர் சேர்ந்தார்.

மீண்டும் மலை நாடு செல்லக் கருதிக் கொங்கு வழியே செல்கையில், திருப்புக் கொளியூரில் ஒரு மனையில் அழுகையும் ஒரு மனையில் மணமும் கண்டு வியந்து, வினவி நடந்தவாறு அறிந்து, பதிகம் பாடி முதலைவாய்ப் பிள்ளை அழைப்பித்துப்பின் திருவஞ்சைக்களம் சேர்ந்து கயிலை அடைந்தார்.

இவ்வாறு கூறும் பேரூர்ப்புராணம் சுமார் நூற்றைம்பது வருஷங்களுக்கு முன் திருவாவடுதுறை ஆதீனம் புலவர் சிகாமணியாய் விளங்கிய * ஸ்ரீ கச்சியப்ப முனிவரால்

* ஸ்ரீ கச்சியப்ப முனிவர் முத்தியடைந்தது கி. பி. 1790.

பாடப்பெற்றது. இந்நூல் பெரும்பாலும் பெரிய புராணத்தை ஒட்டியே பாடப்பெற்றது என்பது தெளிவாய்த் தெரிகிறது. ஆனால் இவ்விரண்டு வரலாறுகளுக்கும் வித்தியாசம் உள்ளதா என்பதைக் கவனிக்கையில், சில இருப்புதைக் காணலாம். அவற்றில் முக்கியமானது ஈசன் பள்ளனாக நடித்த திருவிளையாடல். பேரூர்ப்புராணத்தில் குறிப்பாக விவரித்திருக்கும் இச்செய்கை பெரிய புராணத்தில் ஏன் காட்டப்படவில்லை? அது உண்மையாய் நடந்திருந்தால் இப்படி காட்டாமல் விடப்பட்டிருக்குமா?' இவ்வாட்சேபணைக்கு ஒரு வித சமாதானம் கூறமுடியும். பெரிய புராண வாசிரியர் தம் புராணத்தில் பொதுவாக ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் சரித்திரத்தை கூறப்புகுந்தாரேயன்றி சிறப்பாக ஆங்காங்குநடந்த ஸ்தலங்களின் விசேஷங்களை கூறத்தொடங்கினவர் அல்லர்; ஆகையால் நாயனாரின் சரித்திரப் பெரும்பகுதிகளை மாத்திரம் கூறினாரே யன்றி சிறப்பு ஸ்தலமாகிய பேரூரில் நடந்த சிறிய சம்பவங்களைக் கூறவேண்டிய அவசியமிருக்கவில்லை; அந்தஸ்தலபுராணமாகிய பேரூர்ப் புராணத்தில் அவைகளைக்குறிக்க வேண்டிய நியாயமுண்டு. சோழநாட்டிலிருந்த சேக்கிழாருக்கு மேலைக்கொங்கில் உள்ள பேரூரில நடந்த சம்பவமும் நடவடிக்கையும் எப்படித்தெரியவரும்? எனவும் அதற்கு காரணம் கூறுவர். ஆகையால் பொதுச் சரித்திரத்தில் இச்சம்பவம் விடப்பட்டிருந்தால் அதனாலேயே அது நடந்திராது என்று கூறுதல் கூடாது என்பர்.

இவ்வாறு கூறத்தொடங்கும் சமாதானம் எது வரை நிலைக்கும் என்பதைக்கவனிப்போம். பேரூரில் நடராஜப்பெருமான் திருக்கோலம் கண்டதும் அதைச்சிதம்பரத்தில் தமது

6515



திருப்பதிகத்தில் குறிப்பிட்டது முதலாகக் கூறும் சேக்கிழார் சுவாமிகள் இச்சம்பவத்தை மாத்திரம் அறிந்து கொள்ளாமலும் தமது புராணத்தில் குறிப்பிடாமலும் விடுவாரா? இச்சம்பவமும் விட்டுவிடத்தகுமாறு அவ்வளவு சிறியது எனக் கொள்ளத்தக்கதல்லவே. தவிரவும் சேக்கிழார் சுவாமிகள் சுந்தர மூர்த்திகள் சரித்திரத்தில் ஏதாவது ஒரு சம்பவத்தை கதைப்போக்கில் விட்டுவிட்டாலும், தம்புராணத்துச் சருக்கங்களின் இறுதியில் கூறும் நாயனார் தோத்திரச் செய்யுள்களில் நுணுக்கமாகக்காட்டிவிடுகின்றனர். உதாரணமாக, சிவபெருமான் பரவையார் ஊடல் தீர்க்கத் தூது சென்ற நாள் சுந்தர மூர்த்தி நாயனார் கூன், குருடு தீர்த்து ஏவல் கொண்ட அற்புதத்தை அவரது சரித்திரத்தில் ஆசிரியர் கூறுவிடினும் 'வார் கொண்ட வனமுலையாள்' சருக்கத்து இறுதியில் (அதாவது கூற்றுவ நாயனார் புராண இறுதி) உள்ள நம் நாயனார் தோத்திரச் செய்யுளில் நுணுக்கமாகக் கூறியிருக்கின்றதைக் காணலாம்.* இவ்விதமாகவாவது, இப்பள்ளுப்படலத் திருவிளையாடலை பெரிய புராணத்தில் எவ்விடத்திலேனும் ஆசிரியர் குறித்திருக்கின்றனரா எனில் எங்குமில்லை. ஆகையால் சேக்கிழார் சுவாமிகள் காலத்தில் இச்சம்பவம் வியாபகத்தில் இருந்திருக்காது என ஊகிக்கலாம். ஆனால் ஒன்று, பேரூரில் இத்திருவிளையாடல் ஓர் உற்சவமாக

---

* தேனுங் குழலும் பிழைத்த திரு மொழியாள் புலவி தீர்க்கமதி
தானும் பணியும் பகை தீர்க்கும் சடையார் தூது தரும்திருநாட்
கூனுங் குருடும் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்
யானும் பரவி தீர்க்கின்றேன் எழுபிறப்பின் முடங்குகூன்.

பெரிய, கூற்றுவநாயனார், செய்யுள் 9.

தொன்று தொட்டு நடந்து வருவதென்று தெரிகிறது. இத் திருவுருவத்தோடு இறைவனும் இறைவியும் எழுந்தருளியிருக்கும் ஒரு சிறு தனியாலயம் ஒன்று பெரிய கோயிலுக்கு முன்புறம் உள்ளதையும் காண்கிறோம். எனினும் இவ்வுற்சவம் எக்காலம் தொடங்கியதோ என்பதை அறிய யாதொரு ஆதாரவும் இல்லை. கச்சியப்பசுவாமிகள் பேரூர்வந்து வாழ்ந்த காலத்தில் இவ்வுற்சவத்தை தானேநேரில் கண்டு அவ்விருத்தாந்தத்தை பெரிய புராணத்தில உள்ள மற்ற சரித்திரப்பகுதிகளோடு சேர்த்து ஒரு வரலாறுகத் தொகுத்து இப்பள்ளுப் படலத்தைப்பாடினார்போலும். ஆகையால் இவ்வுற்சவம் நூற்றைம்பது வருஷங்களுக்கு முற்பட்ட காலத்திலேயே நடை பெற்றிருத்தல் வேண்டும் என்பது திண்ணம். பேரூர் புராணம் வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது எனக்கொண்டால், இவ்விஷயம் வடமொழி நூலில் உண்டா? அது எக்காலத்தில் எழுதப்பட்டது; என்ற கேள்விகள் பிறக்கும். அவை ஆராயத்தக்கவையே. ஆனல் வடமொழி நூல் கிடைப்பதே அரிது என்றால் அதனாராய்ச்சியும் மிக அரிது அன்றோ?

மேலும், சிவபெருமான் உலகில் உயர்ந்ததும் இழிந்ததுவும் தானே என மறை ஓதுகிற பழிப்பினையை உலகோர்க்கு வெளிப்படுத்த பள்ளனாக அவதரித்தார் என பேரூர்ப் புராணத்தில் * கூறப்பட்டிருத்தலால், சிவபெருமானின் அனந்த கல்யாண குணங்களில் இதனை நிரூபிப்பதற்காக, பேரூர்

* உயர்ந்ததுவுந் தாமே யிழிந்ததுவுந் தாமேயென மறையோலமிட்டுரைக்கும்
வியர்த்தஞ் செய்கை யிரண்டனு ளொன்று வேதியனுகி முன் காட்டிப்

வாழ் அடியார்கள் இச்சம்பவத்தை உண்டுபண்ணி ஒரு உற்சவமாகக் கொண்டாடினார்கள் போலும் என்பாருமுளர்.

பேரூர்ப்புராணக் கதைக்கும் பெரிய புராணக் கதைக்கும் மற்றொரு வித்தியாசம் உண்டு. சுந்தர மூர்த்திகள் பேரூரில் சிவபெருமானைப் பொன் தரும்படி பாடியதும், அதற்குச் சிவபிரான் “நினது பாட்டிற்கு நமது ஆட்டே பரிசு, சேரமான் பொன் தருவான்” என அருளியதும் பேரூர்ப்புராணத்தில் உண்டே ஒழிய பெரிய புராணத்தில் இல்லை. இவ்வித்தியாசத்திற்கும் முன்னர்க்கூறிய ஆட்சேபனை சமாதானங்களே பொருந்தும். ஆனால் மற்றொரு கொள்கை என்னவெனில் சேரமான் பெருமாள் நாயனார் பின்னால் சுந்தர மூர்த்திகளுக்கு பொன் தரும் விஷயத்தை உத்தேசித்து, அதற்கு ஒரு காரணம் கற்பிக்க வேண்டியது அவசியம் என்று எண்ணி இதனைச் சேர்த்திருக்கலாம். மேலும், தனது பக்தன் தன்னிடமேயன்றி பிறரிடம் பொன் பெறலாகாது என்பது ஈசனார் திருவுள்ளக் கருத்தாகும் ஆதலின் அவ்விதம் பொருள் பெறுவதற்குத்தாமே பேரூரில் ஆணை தந்தார் எனக்காரணம் கூறுவர். ஆனால் சேரமான் பெருமாள் நாயனார் கொடுத்த பொருள்களை ஈசனார் தம் கணங்களை அனுப்பிக் கவர்ந்து கொண்டு மீட்டும் தாமே திருமுருகன்பூண்டியிலே கொடுத்ததாகக் காண்கிறோம். மேலே

---

பயந்தரு மிறைவர் மற்றதுங் காட்டப் பள்ளனுய்த்
திரு விளையாட்டா
னயர்ந்த பூம்பணையின் வினை செய வன்பர்
கண்ணுறுமனன்னினரம்மா.

(பேரூர். பள்ளுப்படலம்—24)

பேரூர்ப்புராண வாசிரியர் கூறியபடி பெருமானே சேரமான் பெருமானிடம் பொருள் பெற அனுமதி தர வேண்டியது அவசியமாயிருந்து அப்படி தந்துமிருந்தால் திருமுருகன் பூண்டியில் அப்பொருள்களைக் கவர்வதற்குக் காரணமில்லை யே? சேக்கிழார் நாயனாரும் அப்பொருள்களைக் கவர்ந்து மீண் டும் தந்ததற்குத் தாமே கொடுப்பதல்லால் வேறு ஒருவர் கொடுப்பக்கொள்ளக் கூடாதென்பது ஈசன் திருவுள்ளமோ *என்று ஊகிக்கிறாரல்லவா? ஆகையால் மேற்கூறியபடி ஒரு காரணம் கற்பிப்பது அநாவசியம் என்று தோன்றுகிற தில்லையா?

சரித்திர சம்பவங்களில் மேலே காட்டிய வித்தியாசங் களைத் தவிர்த்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கொங்கு

*திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற போழ்தின்கட்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபோன் கொடுப்பதலா
லொருவர்கொடுப்,பக்கொள்ளவொண்ணுமைக் கதுவாங்கிப்
பெருகருளாற் றங்கொடுக்கப் பெறுவதற்கோ அதுவறியோம்.
பெரிய, சேரமான். 165.

ஆனல் திருமுருகன் பூண்டிப் புராணமுடையார் வேறு காரணம் ஊகிக்கின்றனர். அதைக்காண்க.

இக்கெறி நாவலூரனார் செல்ல வெம்பிரான் கந்தமாபுரத்து
முன்னவன் முன்னர் வதுவை நாட்டுத்து முறிதெரித்
தாண்டதுபோல
வுன்னருஞ் சிறப்பாலுல கெலாமோங்க வொரு விளையாடலை
நினைந்தோ
அன்னவர் முன்பு வந்த போதாங்க ணடைந்துகை தொழா
மையினலோ.

திருமுருகன், வேடுபறி.—60.

நாட்டு விஜயக்கிரமத்தில் இந்த இரண்டு நூல்களுக்கும் யாதொரு வித்தியாசமும் இருப்பதாகத் தெரியவில்லை.

3. அவிநாசிப்புராணம்:—நமது ஆராய்ச்சிக்கு மூன்றாவதாக எடுத்துக் கொள்ளும் அவிநாசிப் புராணத்தில் சுந்தரச் சருக்கத்தில் சுந்தரமூர்த்திகள் சரித்திரம் கூறப்பட்டுள்ளது. அதில் கொங்கு நாடு சம்பந்தப்பட்ட பாகம் எடுத்துக் கூறுவோம்.

சுந்தரமூர்த்திகள் சிவபிரானால் தடுத்தாட்கொள்ளப் பெற்றபிறகு, திருவாரூரில் பரவையாரை மணந்து, திருத்தொண்டத்தொகைபாடி, குடகொங்கம் (மேல் கொங்கு,) அடைந்துப்பின் பலஸ்தலங்களை வணங்கித் திருமுதுகுன்றம் சென்றார்.

சுந்தரமூர்த்திகள் பின்னர் பலஸ்தலங்களைத் தரிசித்து திருவாரூரில் இருக்கையில், அவரைச் சந்திக்க ஆவல் கொண்ட சேரமான் பெருமாள் நாயனார் திருவஞ்சைக் களம் விட்டு, கொங்கணைந்து ஆம்பிரநதி சார்ந்த * வஞ்சியைச் சேர்ந்துப் பின் திருவாரூர் சென்றார். அங்கே அவர் சுந்தரமூர்த்திகளைக் கண்டு நட்புக் கொண்டு பின், இருவருமாகத் திருவஞ்சைக்களம் சேர்ந்தனர். அவ்விடம் சேரமான் பெருமாளிடம் சுந்தரமூர்த்திகள் அளவற்ற திரவியம் பெற்று மீண்டு வருகையில் திருமுருகன்பூண்டியில் சிவகண வேடுவர்க்குப் பறி கொடுத்தனர். அப்போது திருமுருகேசமுடையாரைத் துதித்து "எத்துக்கிருந்தீர் எமபிரா

* ஆம்பிராவதி நதிக்கரையில் உள்ள கரூரை வஞ்சிஎன்கிறார் இந்த ஆசிரியர். இதைக்குறித்து பிரபல விவாதம் உண்டு.

னீரே" எனும் தொடர்கொண்ட திருப்பதிகத்தால் பாடவே, கோயில் கணக்கனால் பறி கொடுத்த திரவியத்தை மீண்டும் பெற்று திருவாரூரடைந்தார்.

மற்றும், சுந்தர மூர்த்திகள் சோணாடு நீங்கிக் கேரளம் அடைந்து, "சேர விண்ணுடர் போற்றும் முருகேசம்" என்னும் முல்லை வனம் வழியே செல்கையில பசியால் வருந்தி நிற்கவே, அவிநாசியெம்மான் வேதியனாய் வந்து பொதி சோறு கொண்டுவந்து கொடுத்தார். அதைப்பெற்றுத்திரை போட்டு உண்டு, கல்லில் கைதுடைத்துப்பின் சோறு தந்த வேதியரை கொங்கில் வாரணவாசிக்கு (அவிநாசி) வழி ஏது எனக்கேட்டார். உடனே அவர் குடத்தினை காட்டி மறைந்தார். அவ்வழியே அவிநாசி சென்று நமது நாயனார் வேதியர் தெருவில் ஒரு மனையில் அழுகையும் மற்றொன்றில் மணமும் இருக்கக்கண்டு வியந்து முதலை பிள்ளையுண்ட விஷயம் தெரிந்து, குளக்கரையை அடைந்து பதிகம்பாடி, முதலையை பிள்ளையுமிழச் செய்து அக்குழந்தைக்கு உபநயனம் செய்வித்தார். பிறகு அவ்வூரைவிட்டுத் "தமிழ் முனி பூசனையுகந்த" துடிசைக்குப் போய் நிமலனைப் போற்றி முருங்கைக் கறி நல்லமுது அவர் அளிக்க உண்டார். அவ்விடம் விட்டு நாயனார் பேரூர் செல்லவே அங்கு பட்டி நாயகர் உழவன் உருக்கொண்டு நெல் விதைப்பதைக் கண்டு மகிழ்ந்து அரசம்பலத்தில் ஈசன் ஆடல் செய்யத் தான் பாடல் செய்து, மலைநாடு சென்று சேரமானுடன் கைலை அடைந்தார்.

இவ்விதமான கதைப்போக்கைக் கொண்ட அவிநாசிப் புராணம் இன்றைக்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்குமுன்

இளையான் கவிராயரால் பா[illegible] முந்தி நாம் கூறிய புராணங்களின் சரித்திரக்கிரமத்திற்கு இந்நூலில் கண்ட கதைப்போக்கு வெகுவாய்மாறுபட்டிருப்பதை ஆராய்ந்தால், இப்புலவர் இந்நாட்டில் வழங்கி வந்த கர்ணபரம்பரைக் கதைகளே அதிகமாக எடுத்தாண்டார் எனவும், பெரியபுராணத்தை அதிகமாகப்பின் பற்றவில்லை எனவும் சொல்ல வேண்டி வரும்.

**i.** இந்நூல் ஆசிரியர் சுந்தரமூர்த்தி நாயனர் கொங்கு நாட்டில் முதல் தடவை செய்த விஜயத்தைக் கூறும்போது "குடக்கொங்கு" அடைந்தார் என்று மாத்திரம் கூறினரே யன்றி, அங்கே அப்போது நடந்தவை இன்னவென்று சிறிதேனும் கூறவில்லை. ஆனல் அச்சமயம் நடந்ததாகப் பேரூர் புராணத்தில் சொல்லிய பள்ளவேடத்திருவிளையாடல் அவரது கடைசி விஜயத்தில் நடந்ததாகக் கூறுகிருர். மேலும், நாயனர் முதல் விஜயத்தில் பேரூர் சென்றதாவது, அங்கே கனகசபையில் நடனம் தரிசித்ததாவது, சிதம்பரத்தில் அதை குறித்து தமது பதிகத்தில் பாடினதாவது அவிநாசிப்புராணத்தில் கூறப்படவில்லை.

**ii.** சேரமான் பெருமாள் ஆம்பிராநதிக் கரையிலுள்ள வஞ்சி யடைந்ததும் சுந்தரமூர்த்திகள் திருமுருகன்பூண்டியி னருகில் பறி கொடுத்த பொன்னை கோயில் கணக்கன் மூலமாய்ப் பெற்றதும் புதிதாக இந்நூல் கூறுகிறது. இவ்வாசிரியர் உத்தேசித்திருக்கிற நகராகிய கருருக்கு வஞ்சி என்ற பெயர் சுந்தரமூர்த்திகள் காலத்தில் வழங்கி வந்ததோ என்பது சந்தேகம்.

iii. இந்நூலாசிரியர் கொங்கு நாட்டை கேரளம் ஆக்கி விட்டது வியக்கத்தக்கது.

iv. சுந்தரமூர்த்திகள் அவிநாசிக்குப் போகும் வழியில் முருகேசம் (திருமுருகன்பூண்டி) அடைந்ததும், அங்கு பசி உண்டாகச் சிவபிரான் வேதியனாய் வந்து பொதிசோறு கொடுக்கத்தான் உண்டு கல்லில் கை துடைத்ததும் முதலான கதை பழைய புராணங்களில் கிடையாது. ஆனால் இதை ஒரு கர்ணபரம்பரையை ஆதாரமாகக் கொண்டே இந்நூலாசிரியர் எழுதியிருக்க வேண்டும். அக்கதையும் குறைந்தபக்ஷம் ஐந்நூறு வருஷங்களுக்கு முந்தியே வழங்கியிருக்கவேண்டும். ஏனெனில் அருணகிரிநாத சுவாமிகள் தமது திருப்புகழில் இவ்விஷயத்தைக் குறித்துப் பாடியிருக்கிறார்.*

v. சுந்தரமூர்த்திகள் அவிநாசியை விட்டு துடிசை சென்று முருங்கக்கீரை உண்டு பின் பேரூர் போனதும் முந்திய வரலாறுகளில் கிடையாது.

இதுகாறும் சொன்னவைகள் எளிதில் தென்படக்கூடியவைகள். இன்னமும் பல இருக்கலாம். ஆகையால் இவ்வாசிரியர் பெரிய புராணத்தையாவது, தேவாரத்திருமுறைகளையாவது ஆராய்ந்து பின்பற்றிச் சென்றதாகச் சொல்ல இடமில்லை.

---

* மதப்பட்ட விசாலக போதமும்

..........................................................................

..........................................................................

4. திருத்துடிசைப்புராணம்:—இந்நூலில் ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் சரித்திரம் "சுந்தரமூர்த்தி பூசனைச் சருக்கத்தில்" கூறப்பட்டுள்ளது. திருநாவலூரில் சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் மைந்தராய் அவதரித்து நம்பியாரூரர் என்ற பெயர் படைத்த ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் முதலைவாய்ப் பிள்ளை மீட்டுதிக்கவும், ஆறுமண்றிடை வழி விடவும், செங்கல் பொன்னாகவும் பதிகங்கள் பாடி, பல திருப்பதிகள் தரிசித்துப் பிறகு கொங்குநாடு புகுந்தார். அந்நாட்டில் கொடுமுடி, திருமுருகன்பூண்டி மற்றுமுள்ள ஸ்தலங்கள் சென்று பதிகங்கள்பாடி புக்கொளியூரவிநாசியடைந்தார். அங்கு தேவாரம் பாடி துடிசை நோக்கிப்போகையில் அவர் ஓர் இருண்ட அடவியில் வழி தெரியாது திகைக்கவே சிவபிரானும் தேவியாரும் கிழவேடம் பூண்டு அவருக்கு வழிகாட்டி மறைந்தனர். சுந்தரமூர்த்தி நாயனார் துடிசை அடைந்து குருவதீர்த்தத்தில் நீராடி ஆலயம் சென்று கடவுளைத் துதிக்கவும், கடவுள் கட்டளையினால் கணேசர் அவருக்குப் பல

---

இதப்பட்டிடவே கமலாலய வொருத்திக் கிசைவான பொனுயிர
மியற்றுப்பதி தோறுமுலாவிய தொண்டர்தாள
இசைக்கொக்கவி ராசதபாவனை யுளப்பற்றெடு யடிட
வேடையில்
இளைப்புக்கிட வார்மறை யோனென வந்த நாளிற்
றிதப்பட்டேதி ரேபோதி சோறினை யவிழ்த்திட்டவிநாசி
யிலேவரு
திசைக்குற்ற சகாயனுமாகிம றைந்து போமுன்
செறிப்பித்தக ராபதின் வாய்மக வழைப்பித்த புராண க்ருபாகர
திருப்புக் கொளியூருடையார் புகழ் தம்பிரானே.
திருப்புகழ் செ. 928-அவிநாசி-

சுவையுடன் முருங்கைக்கீரைக் கறியுடன் அமுது புசிப்பித்தார். நாயனர் அவ்வமுதை உண்டு களித்து தமிழ் வேதம் ஓதி ஆதிபுரியாகிய பட்டீச்சுரம் (பேரூர்) நோக்கி நடந்தார். துடிசையில் அவ்வாறு விருந்தளிக்கப்பட்டதால், ஸ்வாமிக்கு விருந்தீஸ்வரர் என்று பெயர் வந்ததாம்.

இவ்வரலாறுள்ள துடிசைப்புராணத்தை இயற்றியவர் இன்னுரென்று தெரியாது. 'குலோத்துங்கன் வாழி' என்று ஒரு செய்யுளில் கண்டிருப்பதினுல் அதன் பதிப்பாசிரியர் அந்நூல் குலோத்துங்கச்சோழன் காலத்ததென்றும் அதாவது சுமார் எழுநூறு வருஷங்களுக்கு முன் அது எழுதப்பட்டிருத்தல் வேண்டும் என்றும் தம்முகவுரையில் எழுதுகிருர். ஆனுல் மேலே கண்ட குலோத்துங்கன் இன்னவன் என்று சொல்ல முடியாது. அப்பதிப்பாசிரியரே தாம் ஒரு சாஸனத்தில் வானவநல்லூருக்கதிபதியான ஒரு குலோத்துங்கன் பெயரைக் கண்டதாகக் கூறுகிருர். ஆகையால் சோழநாட்டு அரசர்களான குலோத்துங்கர்களே யல்லாமல் வேறு ஊர்களை ஆண்ட சிற்றரசர்களும் அப்பெயரோடே இருந்திருக்கலாம்; அப்படிப்பட்ட சிற்றரசன் ஒருவன் காலத்தில் இந்நூல் இயற்றப்பட்டும் இருக்கலாம். இந்நூலின் செய்யுள் நடை முதலியவைகளைக் கவனித்தால் இது ஒரு சமீப காலத்து நூல் என்வே தோன்றும்.

இந்நூல் வரலாறும் அவிநாசிப்புராண வரலாறும் வெகுவாய் ஒத்திருப்பதைப் பார்த்தால் இந்நூல் அவிநாசிபுராணத்திற்குச் சிறிது முந்தியதாவது அல்லது பிந்தியதாவது இருத்தல் வேண்டும் எனப் புலப்படும்.

இந்நூலின்படி கொடுமுடி, திருமுருகன்பூண்டி, அவிநாசி, துடிசை, பேரூர் இவைகட்கெல்லாம் ஒரே தடவையில் சுந்தரமூர்த்திகள் யாத்திரை சென்றதாகக் காண்கிறோம். இவ்விஷயத்தில் இந்நூல் அவிநாசிப்புராணத்துடன் முரண்படுகிறது. அவிநாசியில் முதலைவாய்ப்பிள்ளையுமிழ்ந்த அற்புதத்தை நாயனார் அவிநாசிக்குச் சென்றதைக் கூறும்போது குறிக்கவில்லை. ஆனால் அவ்வற்புதத்திற்காக தேவாரம் பாடியதாக ஊர் பெயர் குறிக்காமலே கூறப்பட்டிருக்கிறது. திருமுருகன்பூண்டியில் பறி கொடுத்த விஷயம் சொல்லப்படவில்லை. சுந்தரமூர்த்திகள் கொங்குநாட்டிற்கு எவ்வளவு விஜயங்கள் செய்தார், எந்த விஜயத்தில் துடிசை சென்றார் என்பவை இந்நூலில் தெளிவாகவில்லை. இதனாசிரியர் சரித்திர விஷயம் ஒன்றுமே கவனியாது, தேவாரம், பெரியபுராணம் முதலிய பழைய நூல்களையும் பாராது கர்ணபரம்பரையையே ஆதாரவாக வைத்துக் கொண்டு பாடினார் போலும். துடிசைக்குச் சுந்தரமூர்த்திநாயனார் சென்றதாகப் பெரியபுராணத்திலாவது பேரூர்ப்புராணத்திலாவது சொல்லக்காணவில்லை. ஆனால் சேக்கிழார் பெருமான் சுந்தரமூர்த்திகள் அவிநாசியில முதலையைப் பிள்ளையுமிழச் செய்தபிறகு, மேற்றிசையில் "சிவனாரடியார் பதிகள் தோறும் "சென்று மகிழ்வுற்று" கானகமும், கான்யாறும் கற்சுரமும்" கடந்து

சென்ற சென்ற குடபுலத்துச் சிவனாரடியார் பதிகடோறு
நன்று மகிழ்வுற், றின்புற்று நலஞ்சேர் தலமும் கானகமும்
துன்று மணிநீர்க் கான்யாறுந், துறுகற் சுரமும் கடந்தருளி
குன்ற வளநாட், டகம் புகுந்தார் குலவு,மடியே னகம்புகுந்தார்.
பெரியபுராணம்-வெள்ளானை-15.

மலைநாடு புகுந்தார் எனக்கூறுகிறபடியாலும், துடிசை முதலிய ஸ்தலங்கள் கொங்கு நாட்டில் வானகங்களுக்கு இப்பக்கமே உள்ளனவாகையாலும் அந்தஸ்தலங்களையே ஆசிரியர் எண்ணியிருக்கலாம் அல்லவா? மேலும் துடிசை (துடியலூர்) இடிகரை, அன்னியூர் (அண்ணூர்), சேவூர், குரக்குத்தளி (பெரியபாளையம்), கோவில்பாளையம் (சர்க்கார் சாமக்குளம்) முதலிய ஊர்களின் சிவாலயங்கள் மிகப்பழையவையென்று அவைகளின் சிலாசாசனங்களால் தெரிய வருகிறதினால், ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் அவைகளுக்குச் சென்று தேவாரங்கள் பாடியுமிருக்கலாம். பின்னர் அவைகள் இறந்து பட்டுமிருக்கலாம். அப்படியிருக்குமானால் இந்நூலின்படி சுந்தரர் துடிசை சென்றதும் அதற்கு ஆதரவாக இருந்த கர்ண பரம்பரையும் வெற்றுரைகள் அல்ல எனலாம்.

5. திருமுருகன்பூண்டித்தல புராணம்:—இந்நூலில் வேடுபறிச்சருக்கத்தில் கொங்கு நாட்டில் சுந்தர மூர்த்திகள் செய்த காரியங்களை அடியில் கண்டவாறு கூறப்பட்டிருக்கின்றன.

சுந்தரமூர்த்திகள் தடுத்தாட் கொள்ளப் பெற்றுப் பரவையாரை மணந்துப் பல ஸ்தலங்களைத் தரிசித்து விட்டு கொங்கு நாடு புகுந்துக் கொடுமுடியைத்துதித்துக் காஞ்சிவாய்ப் பேரூரில் மள்ளர் வேலை கொண்ட திருநடப்பாட்டைக்கண்டு வணங்கிப் பின் வெஞ்சமாங்கூடலூர் முதலிய திருப்பதிகள் சென்றார். பின்னர் திருவொற்றியூரில் சங்கிலி நாச்சியாரை மணந்து சேரமானுடைய கொங்கு நாட்டைக் கடந்துத் திருவாரூர் சென்றார்.

மற்றும், நாயனார் கொங்குநாடு கடந்து திருவஞ்சைக்

களம் சேர்ந்து சேரமான் பெருமாளிடம் பொருள் பெற்று முல்லைவனமாகிய மாதவி வனத்தின் வழிவந்தார். சிவபிரான் தம் கணங்களை ஏவி வேடர் உருவெடுத்துப்போய் அப்பொருளைக்கவரச்சொல்ல, அவர்களும் அவ்வாணையை மேற்கொண்டு ஸ்ரீ சுந்தரமூர்த்திகளை இம்சிக்காமல் அவர் பொருளை மாத்திரம் கவர்ந்து சென்றனர். அப்போது அதை நோக்கிய பிள்ளையார் கூ கூ என்று கதரவே, அதனால் களவை வெளிப்படுத்தியதற்காக ஈசன் பிள்ளையாரை அடித்து, அந்தப்பசிய மரத்தடியிலேயே இரக்கத்துடன் இருக்கும்படி சபித்துச் சென்றார். அதனாலே அன்று முதல் அப்பிள்ளையாருக்கு கூப்பிடு பிள்ளையார் என்ற நாமம் உண்டாயிற்று. பின்னர் ஸ்ரீ சுந்தரர் ஆலயம் சென்று சுவாமியை 'நீரே பொருளைக் கவர்ந்தீர் என்று பழி கூறித்துதிக்கவும், சிவபிரான் கணங்களைப்பொருள் கொடுத்து விடும்படி ஆக்ஞாபிக்கவும் அவர்கள் அவ்விதமே கொடுக்கத்தாம் பெற்றுக் கொண்டு திருவாரூர் சென்றார்.

பிறகு மீண்டும் கொங்கு நாடடைந்து அவிநாசியில் பிள்ளையை முதலை உமிழச்செய்து பின் திருவஞ்சைக்களம் சென்றார்.

இவ்விதமாகக்கூறும் இத்தல புராணத்தை ஓராட்டுக் குப்பைச் செட்டிபாளையத்து வாசுதேவ முதலியார் சமீபகாலத்தில் அதாவது 50 அல்லது 60 வருஷங்களின்போது பாடினார். நூலில் கதையின் போக்கை அனுசரித்தால் பெரிய புராணம், பேரூர்ப் புராணம் இவைகளை ஒட்டியே, பாடியிருக்கிறார் எனலாம். ஆனால் கூப்பிடு பிள்ளையார் விஷ

யம் புதியது. இதை அந்தஸ்தலத்தின் கர்ணபரம்பரையின் படி சேர்த்தினர் போலும். ஏனெனில் இப்போதும் திருமுருகன் பூண்டியில் கூப்பிடுபிள்ளையாரும் அவருக்கு ஓர் ஆலயமும் உண்டு. ஆனால் முல்லை வனமானது மாதவிவனமாவது இப்போது இருப்பதாகத் தெரியவில்லை. முன்காலத்தில் இருந்திருக்கலாமென்று* ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் தேவாரத்தாலும் தெரிய வருகிறது. அவிநாசிப்புராணம் கூறுவதைப்போல் இவ்வாசிரியர் கணக்குப்பிள்ளை பொருளை சுந்தரருக்குக் கொடுத்ததாகக் கூறினரில்லை. நாயனார் திருவொற்றியூரிலிருந்து கொங்கு நாடு கடந்து திருவாரூர் சென்றது வேறு எந்த நூலிலுமில்லை. அந்த ஊர்களுக்கு இடையில் கொங்கு நாடும் கிடையாது. இது ஒரு கைப்பிசகு போலும்.

6. மற்றஸ்தலபுராணங்கள்:—சுந்தரமூர்த்தி சுவாமிகள் சென்று தேவாரம் பாடிய மற்றைய கொங்கு ஸ்தலங்கள் கொடுமுடியும் (திருப்பாண்டிக் கொடுமுடி) வெஞ்சமாங் கூடலூருமே. இவற்றில் கொடுமுடி ஸ்தலபுராணம் இன்றைக்குச்சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு வெங்கடரமணதாசரால் பாடப்பெற்றது. அதில் நம் நாயனரைப்பற்றிய சரித்திரம் ஒன்றுமே கிடையாது. அந்த ஸ்தலத்திற்கு ஒரு பழைய புராணம் இருந்ததாகவும் அது அழிந்துபோகவும் சில ஏடுகள் மாத்திரம் தமக்கு கிடைத்ததாகவும் அவைகளைத் தம் புராணத்தில் சேர்த்துக் கொண்டதாகவும் அந்த ஆசிரியர் தம் முகவுரையில் கூறுகின்றனர். மேலும் இந்தஸ்தலத்தை நமக்கு எப்போதும் நினைப்பூட்டு

---

* "முல்லைத்தாது மணங்கமழ் முருகன் பூண்டி மாநகர் வாய்"
-திருமுருகன்-தேவாரம் செ 2.

வது எதுவெனில் "மற்றுப்பற்றெனை" எனத் தொடங்கும் பெயர் பெற்ற பஞ்சாட்சரத் தேவாரமே. வெஞ்சமாங் கூடலூரின் தலபுராணம் கிடைக்க வில்லை. அதில் எவ்வளவு மாத்திரம் சுந்தரமூர்த்திகள் சரித்திரம் வெளிப்படுகிறதோ என்பதும் அறியக்கூடவில்லை. கொங்கேழு தலங்களில் மற்றுமுள்ள பவானி (திருநணா), திருச்செங்கோடு (கொடிமாடச்செங்குன்றூர்) இவைகளுக்குச் சுந்தரமூர்த்தி நாயனார் விஜயம் செய்யாததினால் அவர் தேவாரமும் கிடையாது; அவைகளின் ஸ்தல புராணங்களில் அவரது சரித்திரமும் கிடையாது.

7. மற்றைய நூல்கள்:—சுந்தரமூர்த்திகளின் கொங்குநாட்டுச்சரித்திரத்தைக் கூறும் நூல்களில் 'சுந்தரர் வேடுபறி' என்பது ஒன்றாகும். இது ஒரு சமீபகாலத்து நூல் என்று அதைப் படித்த மாத்திரத்தாலே தெரியவரும். அதில் வருணனை அதிகமேயன்றி சரித்திர விசேஷம் ஒன்றுமே கிடையாது.

8. கர்ணபரம்பரைகள்:—சுந்தரமூர்த்திநாயனார் அவிநாசியில் முதலைவாயிலிருந்து பிள்ளையை மீட்டு வந்த பின் கணவாய்ப்பாளையம் வழியாகப்போகையில், அவ்விடம் தாம் உண்ட சாதத்தைக் கக்கினாராம். அதனாலே அக்கணவாய்ப்பாளையத்தில் கோயில் கொண்டிருக்கும் மூர்த்திக்கு கக்குமலேசுவரர் என்று பெயர் வந்ததாம். பிறகு சுந்தரமூர்த்திகள் மருதமலை சென்று சுவாமியை தரிசித்துப்பின் பேரூர் சென்றனராம். இக்கதை கோயமுத்தூருக்கு வடக்கே ஆறுமயில் தூரத்துள்ள கணவாய்ப்பாளையம் முதலிய ஊர்களில் வழங்கி வரு

கிறது. இவ்விஷயம் வேறு எந்த புராணத்திலும் இருப்ப தாகத் தெரியவில்லை. ஆனால் இந்தஸ்தலத்திற்கு ஒரு புரா ணம் இருப்பதாகவும் வதந்தி உண்டு. அது இது வரை வெளி வந்ததாகவும் காணோம்.

கொங்கு நாட்டில் அண்ணூர், சேவூர் முதலிய தலங்க ளுக்கு நாயனாரால் பாடப்பெற்ற தேவாரங்கள் இருந்தன வென்றும் அவைகள் இப்போது மறைந்திருக்கின்றனவென் றும் சொல்வதுண்டு. ஆனால் அது அந்தக் கோயில்களின் புராதனத்தைத் தவிர நூல் வகையான வேறு ஆதரவுகளால் ஆளப்படுகிறதில்லை.

---

## iv.

இத்காறும் கொங்கு நாட்டில் சுந்தரமூர்த்திசுவாமிகள் செய்த விஜயங்களைப்பற்றியும், அக்காலத்து உண்டான சம்பவங்களைப் பற்றியும், நமக்குக் கிடைத்த ஆதாரவுகளைக் கொண்டு ஆராய்ந்தோம். அவைகளில் சரித்திர பூர்வமாய் நாம் கொள்ளத்தக்க விஷயங்களை இனிக்கவனிப்போம்.

நாடு:—ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார் காலத்திற்கு முன்னமே கொங்கு நாடு ஒரு தனி நாடாகி, அதன் நாற்புறத்து எல்லைகளும் ஸ்திரமடையப்பெற்று இருந்தது என்பது மிகத் தெளிவு. சோழநாட்டு ஈங்கோய் மலை விட்டுக் காவிரி கடந்து கொடுமுடியில் அடி வைத்தவுடன் கொங்கு நாடு சேர்ந்து விட்டதாக * பெரியபுராணம் கூறுகிறதினால், அந்நாட்டுக்கு அப்பக்கத்து எல்லை அதுவே என்பது நிச்சயம். அதற்கு வடக்கே உள்ள திருச்செங்கோடு கொங்கு நாட்டுப் பகுதியென்று திருஞானசம்பந்த சுவாமிகள் புராணத்தில் கூறப் பட்டிருக்கிறதினால் அவ்வூருக்குக் கிழக்கிலுள்ள மலைத்தொடர் வரையில் கொங்கு நாடு பரவியிருந்தது என நாம் ஊகிக்கலாம். கொங்கு நாட்டிற்கு மேற்கெல்லையாக இருக்கும் மேற்குத்தொடர்ச்சி மலையும் அதனைச்சார்ந்த வாளையாற்றுக் கானல் முதலிய கானகங்களுமே சேரநாடாகிய மலைநாட்டை அதனின்றும் பிரித்து நின்றன. தற்காலத்தில் மேற்கெல்லையாக இருக்கும் இவையே சுந்தரமூர்த்திகள் காலத்திலும் இருந்தன வென்பதற்கு

*பெரிய புராணம் ஏயர்கோன்-செ 86.

"காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்
நீரூருங் கான்யாறு நெடுங்கானும் பல கழியச்
சீரூரும் திருமுருகன் பூண்டி வழிச்செல்கின்றார்."

(சேரமான்-164)

....................கானகமும்

"துன்று மணிநீர்க் கான்யாறும் துறுகற்சுரமும் கடந்தருளிக்
குன்ற வளநாட்டகம் புகுந்தார்"

(வெள்ளானை-15)

"கொங்க நாடு கடந்துபோய்க் குலவு மலைநாட்டெல்லை யுற்"

(சேரமான்-141)

என்ற செய்யுள்களே சான்றாகும். அச்செய்யுள்களே கொங்கு நாடு வேறு மலைநாடு வேறு எனவும் தெரிவிக்கின்றன. இவ் விரண்டு நாடுகளுக்கும் நடு எல்லையும் இன்னதென்று புலப் படுத்துகின்றன. பெரியபுராணத்தில் எவ்விடத்திலாவது கொங்கு நாடு சேரருக்குச் சேர்ந்ததென்ற மேற்கோள் கிடையாது. ஆனால் அந்நூலுக்குச்சுமார் எண்ணூறு வருஷ காலத்திற்குப்பிந்தியாகிய சமீபகாலத்தில் ஏற்பட்டவையான திருமுருகன்பூண்டிப்புராணத்தில் கொங்குநாடு சேரமான் நாடு (வேடுபறி-51, 55) எனவும், அவிநாசிப்புராணத்தில் 'சேரனெடுஞ்செங்கோன் முறைறி என்றும் திகழ்நாடு" "கேரள கொங்கப்பேர்" (சுந்தர 249) எனவும் கூறியுள்ள தைக்காண்கிறோம். திருவொற்றியூரிலிருந்து திருவாரூர் செல்வதற்கு கொங்குநாடு கடக்க வேண்டும் (வேடுபறி-55) என்று கூறும் திருமுருகன்பூண்டிப்புராணம் உடையாரை யும், சிறுபாகமாகிய வடபரிசார நாட்டையும் பெரும்பாக மாகிய கொங்கு நாட்டையும் ஒன்றாக மதித்துக் கூறும்

(சுந்தர-250) அவிநாசிப்புராணம் உடையாரையும் மேற்கோளாகக்கொண்டால் சரித்திர உண்மை காண்பது அரிது மிக வரிது. கொங்குநாடு சேரநாட்டுடன் ஒரு காலத்தில சேர்ந்திருந்தது எனக்கொண்டாலும், நம் நாயனார் காலத்தில் அது ஒரு தனி நாடாக விளங்கி யிருந்தது என்பதற்கு ஆட்சேபனை இல்லை.

நாட்டின் பிரிவுகள்:—சிலாசாசன ஆராய்ச்சியால் கொங்கு நாடு சுமார் ஆயிரம் வருஷங்களின்போது இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததெனத் தெரிகிறது. உடுமலைப்பேட்டை தாலூக்கா கொழுமம் சோளீசுரமுடையார் ஆலயத்தில் செதுக்கப்பட்டிருக்கும் ஒரு *கல் வெட்டுச் சாசனம், ஒரு வீர சோழதேவன் என்ற அரசன் இரண்டு கொங்குகளையும் சேர்த்து அரசாண்ட விஷயத்தைக் குறிக்கிறதினால் அக்காலத்திற்கு முந்தி இரண்டு கொங்குகள் இருந்திருக்க வேண்டும் என்பது நிச்சயம். அவற்றில் ஒன்று கொழுமம் முதலிய ஸ்தலங்கள் உள்ள †தென் கொங்கு நாடு மற்றொன்று பேரூர் முதலிய ஸ்தலங்களைக் கொண்ட மேல் கொங்குநாடு. சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திலேயே மேல் கொங்கு என்ற ஒரு நாடு ஒரு தனிப்பிரிவாக இருந்தது என்பதற்கு அவர் தேவாரமும்

"மீ கொங்கில் காஞ்சி வாய்ப்பேரூர்"

என்ற அடியும்,

பெரிய புராணம்

* சிலாசாசனம் G. E. 150 & 156 of 1909.

† சிலாசாசனம் G. E. 135 of 1915 பார்க்க.

"குடக் கொங்கில் அணைந்து..............................
.....................திருப்புக் கொளியூர் சென்றடைந்தார்."

வெள்ளானை-செ 4.

"குட புலத்துச்சியனுர் அடியார் பதிகடோறும்"

வெள்ளானை-செ 15.

என்ற அடிகளுமே அத்தாட்சியாம். மேல்கொங்கு என்று ஒரு பிரிவு இருந்தால் அதற்கு மாருக வேறு ஒரு கொங்கு இருந்திருக்க வேண்டும் என்பது வெளிப்படை. இது நிற்க, முன்சொன்ன மீ கொங்கு, குடக்கொங்கு என்ற பதங்களில் மீ, குட (க்கு) என்ற இரண்டும் மேல் என்ற ஒரே பொருளைக் கொண்டது என்று ஆசிரியர் அப்பதங்களை பிரயோகித்திருக்கும் தன்மையாலே அறியலாம். எனவே மேல் கொங்கு என்ற பொருள் பெற்ற மீகோங்கு என்ற பதத்தை சுந்தரமூர்த்திகள் தமது தேவாரத்தில் பிரயோகித்திருப்பதினுலே தேவாரத்தையே ஆதாரவாகக் கொண்டு நூலியற்றியிருக்கும் சேக்கிழார் சுவாமிகளும் தமது பெரிய புராணத்தில் பேரூர், அவிநாசி இப்பதிகள் இருக்கும் பாகத்திற்கு குடக் கோங்கு என்று பாராட்டியிருக்கிருர். தமது நூலில் அவசியமான அடைமொழிகளை ஒன்றேனும் விடாமல் திருத்தமாகக் கூறுவது சேக்கிழார் சுவாமிகளது தன்மையாதலால், 'மேல் கொங்கில் இருக்கும் பேரூரைச்' குறிக்க வேண்டு மென்றிருந்தால் 'மேல்' என்ற பதத்தை விட்டு விட்டு வெறும் 'கொங்கில் இருக்கும் பேரூர்' என்று கூறவே மாட்டார். ஆனல் ஆறுமுகநாவலர் தமது பதிப்பில் ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம் 88-ம் செய்யுள் ஈற்றடியை

"குலவு மக்கோங்கில் காஞ்சிவாய்ப் பேரூர்
குறுகினர் முறுகுமாதரவால்."

என்று பதிப்பித்திருக்கிறார். மேற்கூறிய காரணத்தைக் கொண்டு ஆராய்ந்தால், இவ்வடியில் "குலவுமக்கொங்கு" என்பது "குலவுமீ கொங்கு" என்றிருத்தல் வேண்டுமல்லவா? இவையெல்லாம் 'மேல் கொங்கு' என்ற பாகம் இருந்ததை வற்புறுத்துகின்றன.

மேற்கூறிய மேல் கொங்கு, தென் கொங்கு என்ற இரண்டு பிரிவுகளேயன்றி, கொங்கு நாடு மூன்று பிரிவுகளாகவும் பிரிந்திருந்ததென்றும் "சேலம் ஜில்லா கெஜட்டியர்*" என்ற நூல் தெரிவிக்கிறது. தற்காலச் சேலம் ஜில்லாவைச் சேர்ந்த கொங்கு நாட்டின் பாகம் வடகொங்கு எனவும், தற்காலக் கோயமுத்தூர் ஜில்லாவைச் சேர்ந்த பாகம் மேல் கொங்கு, தென் கொங்கு இவைகளாக கொண்டிருந்ததெனவும் அந்நூல் கூறுகின்றது. வட கொங்கு என்ற ஒரு பிரிவு இருந்திருக்கலாம் என்பதற்கு சுமார் 630-வருஷங்களுக்கு முன்னிருந்த வேங்கடநாதாசாரியார் அருளிச் செய்த 'பரமத பங்கம்' என்ற நூலில் 53-ம் செய்யுளில்,

"மாதவனூர் வடகொங்கில் வானியாற்றின்
வண்ணிகை நன்னடங்கண்டு மகிழ்ந்து வாழும்
போதிவைநாம் பொன்னையிந்தை நகரின் முன்னுட்
புணராத பரமதப்போர் பூரித்தோமே."

என்ற அடிகளை அத்தாட்சியாகக் கொள்ளலாம். இவ்வட கொங்கு திருச்செங்கோடு முதலிய திருப்பதிகளைச்சுற்றிலுமுள்ள நாடு. அக்கொங்கின் பால் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் விஜயம் செய்யாததினால் அதன் நிலைமையைப்பற்றி

* Salem District Gazetteer page 57.

ஆராய்ச்சி செய்ய சுவாமிகள் காலத்து ஆதாரங்கள் எதுவும் இல்லை.

மேலும், கொங்கு மண்டலம், கொழுமத்துக்குச் சுற்றிலும் கரைவழி நாடு என்றும், அவிநாசிக்குச் சுற்றிலும் வடபரிசார நாடு என்றும், கொள்ளேகாலத்துக்குச் சுற்றிலும் படிநாடு (ஹடிநாடு) என்றும் பெயர் கொண்ட மூன்று பெரிய நாடுகளையும், வைகாவி நாடு, பேரூர் நாடு முதலிய பல சிறு நாடுகளையும் கொண்டிருந்ததாகச் சிலாசாசன ஆராய்ச்சியினால் அறிகிறோம். முன் சொன்ன மூன்று பெரிய நாடுகளும் நதிகள் பாயப்பெற்ற செழிப்பான பிரதேசங்களைக்கொண்டிருந்தனவென்றும் பல ஊர்களையும் சிறந்த கோயில்களையும் பெற்றிருந்தன வென்றும் தெரிகிறோம். இந்நாடுகள் மிகப்பழயவை எனக் கல்வெட்டுகளால் நமக்கு தெரிந்த போதிலும் அப்பெயர்கள் ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் காலத்தில் வழங்கி வந்தன என்பதற்கு அவர் காலத்து ஆதாரங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனால் மேற்சொன்ன சிறு நாடுகளில் குறுப்பு நாடு என்று ஒன்று இருந்ததாக் * அவிநாசி பெருங்கருணையம்மன் ஆலயத்துச்சிலாசாசனங்களால் தெரிகிறது. இதுவே சுந்தரமூர்த்திகள் தமது ஊர்த் தொகையில் 2-ம் பாட்டில்,

"கொங்கில் குறும்பில் குரக்குத்தளியாய் குழகா குற்றாலா"

என்ற அடியில் உள்ள குறும்பு எனலாம். மெல்லினம் வலித்திருப்பதைத் தவிர மற்றவை ஒத்திருப்பது காணலாம். இச்

---

கொங்கு நாடு 24 நாடுகளைக் கொண்டதாகக் கர்ணபரம்பரை உண்டு.

*G. E. 190 of 1909-குறுப்பு நாட்டில் பாலத்தொழு என்ற ஊரும் G. E. 194 of 1909 குறுப்பு நாட்டில் ஆதனூர் என்ற ஊரும்

சிறு நாட்டில் இருந்ததாகச் சொல்லும் குரக்குத்தளியே தற்காலத்தில் திருப்பூருக்குச் சமீபத்தில் உள்ள •பெரியபாளையம் என்றும் குறும்பு நாடு அவ்வூரைச் சுற்றியுமுள்ள ஒரு பிரதேசம் என்றும் தெரிகிறது.

நாட்டின் அமைப்பு:—ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் காலத்தில் கொங்கு நாட்டின் பெரும்பாகம் ஆரணியமும், கற்சுரமும், கான்யாறும் நிறைந்திருந்தன என்பதாகத் தெரிகிறது. திருமுருகன்பூண்டி முல்லை வனமாகவும் மாதவி வனமாகவும், அதனருகில் ஆறலைக்கும் வேடுவர் வாழும் காடு இருந்ததாகவும் அறிகிறோம். இதற்கு சுவாமிகளின் தேவாரம்.

"வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர் விரவலாமை சொல்லிக்
கல்லினு லெறிந்திட்டு போதியுங் கூறை கொள்ளு மிடம்
முல்லைத் தாது மணங்கமழு முருகன் பூண்டி"

என்பதே ஆதாரம். மற்றும் சுவாமிகள் தம் அவிநாசித் திருப்பதிகத்தில்,

*எங்கேனும் போகினு மெம்பெருமானை நினைக்கக்கால்
கொங்கே புகினும் கூறை கொண்டாறலைப்பார்

இருந்தன என்று கூறும். • பெரியபாளையத்துச் சிலாசாசனங்களாலும் அவ்வூர் குரக்குத்தளி என்றும் அந்நாடு குறும்புநாடு என்றும் அறிகிறோம். கொங்கு மண்டலச் சதகம் "கங்கக்குருசில்" என்ற செய்யுளினுல் நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் வசித்தது இக்குறும்புநாட்டுச் சனகாபுரம் என்று அறிகிறோம்.

*இது சுந்தரமூர்த்திகள் முந்தி திருமுருகன்பூண்டி சென்ற விஜயத்தில் தமக்கு நேர்ந்த இடையூறை நினைத்துப்பாடினர் போலும்.

என்று பாடியிருத்தலால் கொங்கு நாட்டின் நிலைமையைப் பற்றி வேறு என்ன நாம் கூற வேண்டும். துடிசைக்கருகே சூரியன் ஒளி விழாத காடாந்தகார அடவி இருந்ததாகவும் அதில் நமது நாயனர் வழி தப்பிப் போனதாகவும் துடிசைப் புராணம் கூறுகிறது. பேரூர் பிப்பிலாரணியம் எனப் பெயர் கொண்டிருந்ததினுல் அரசமரங்கள் சூழ்ந்த காடாக இருந்தது என்றறிகிறோம். பேரூரை விட்டு வெஞ்சமாங்கூடலூரை அடைவதற்குச் சென்ற ஸ்ரீ சுந்தரமூர்த்திகள் *"அருவழைச்சுரங்களும் பிறவும் பாயுநீர் நதியும் பல பல கடந்து" போனதாக சேக்கிழார் சுவாமிகள் கூறுகிறார். இவைகளை யெல்லாம் கவனித்துப் பார்த்தால் சுவாமிகள் காலத்தில் இக்கொங்குநாடு ஜன நெருக்கம் இல்லாததும் காடடர்ந்ததுமான ஒரு தேசமாக இருந்தது எனக்கொள்ளலாம்.

"கான்யாறும், பாயுநீர்நதி" பல பல இந்நாட்டில் இருந்தனவாக நாம் படிக்கிறபோதிலும், கிழக்கே ஓடுகிற காவிரியும் நடுவே செல்கிற காஞ்சியும் தவிர வேறு நதிகளின் பெயர்களை நாம் காண்கிறதில்லை. மற்ற பெரும் நதிகளாகிய பவானி, ஆம்பிராவதி இவைகளுக் கருகில் ஜனங்கள் அக்காலத்தில குடியேறி இராததினலேயோ, அல்லது அந்நதிகளுக்கருகே சுந்தரமூர்த்திகள் போன்ற பெரியோர்கள் விஜயம் செய்யாததினலேயோ, அவைகளின் பெயர்கள் அக்காலத்து நூல்களில் காணவில்லை.

இந்நாட்டில் "கற்சுரம்" இருப்பதாக சேக்கிழார் கூறினது, அங்கங்கே தனித்தனியாக இருக்கும் பல குன்றுகளை

*பெரிய புராணம் ஏயர்கோன்-92.

யோ அல்லது மேற்குத்தொடர்ச்சி மலைப்பாகங்களையோ எண்ணினது போலும். ஆனால் அவைகளின் பெயர்கள் ஒன்றேனும் கூறினார் இல்லை.

ஊர்கள்:—பாடல் பெற்ற ஸ்தலங்களாகிய கொங்கேழு திருப்பதிகளும், வைப்புஸ்தலங்களாகிய பேரூரும், குரக்குத்தளியுமே தவிர வேறு ஊர்களின் பேர்களை நாம் அக்காலத்து நூல்களில் காண்கிறதில்லை. ஆனால்,

"பாங்கு நற்பதிகள் பலவு முன்பணிந்து"
(ஏயர்கோன்-88)

"பரமர் தம் பதி பலபணிந்து"
(ஷை-92.)

" குடபுலத்துச் சிவனாடியார் பதிகள் தோறும்"
(வெள்ளானை-15)

என்ற பெரிய புராணத்து மேற்கோள்களினால் மற்ற க்ஷேத்திரங்களும் இருந்தனவாகத் தெரிய வரும். எனினும் அவைகள் மிகச்சிற்றூர்களாக இருந்தன என்றோ அல்லது பெரும் ஆலயங்களாக தொண்டிராதவை என்றோ அவைகளின் பெயர்கள் கூறப்படவில்லை போலும். காடடர்ந்த தேசமாகையாலும் பெயர்களே குறிக்கப்படாத காரணத்தினாலும் பெரிய ஊர்கள் அக்காலத்தில் இருந்தன வென்பது சந்தேகம். அக்காலத்து ஊர்களெல்லாம் இயற்கைக்குத் தக்கபடி ஆறுகளின் கரையோரங்களிலும் சமீபத்திலுமே காணப்படுகின்றன. காவேரி, அதன் உபநதியாகிய நொய்யல் (காஞ்சிமாநதி), அதன் உபநதியாகிய நல்லாறு இவற்

றின் பாசனங்களிலே *ஊர்கள் செழித்திருந்தன. ஊர்களில் ஜன செளக்கியத்திற்கு வேண்டியவாறு தெருக்களும், வீடுகளும், குளங்களும், ஆலயங்களும் ஏற்பட்டிருந்தன.

போக்கு வரவு:—சோழநாட்டிலிருந்து கொங்குநாட்டிற்கும் அதிலிருந்து அந்நாடு வழியே மலைநாட்டிற்கும் போக்கு வரவு பாதை ஒன்று ஏற்பட்டிருத்தல் வேண்டும். வியாபார விஷயத்துக்கும் பிரயாண விஷயத்துக்கும் அநுகூலமாக முக்கிய ஸ்தலங்கள் வழியாக அது போய்க் கொண்டிருந்தது. இயற்கையாகவே ஆறுகள் போகும் பள்ளத்தாக்குகளே அப்பாதைக்குத் தகுதியான வழி ஆகும். நடுவில் சில இடங்களில் காடுகளும், காட்டாறுகளும், கற்சுரமும் தாண்ட வேண்டி வரும். ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் போன மார்க்கங்களை அப்பாதையின் தாரை எனக் கொள்ளலாம். மேலும், கொடுமுடி, திருமுருகன்பூண்டி, அவிநாசி, பேரூர் இவ்வூர்கள் எல்லாம் நொய்யலாற்றுக்கு சமீபத்திலே வெகுவாய் அதன் பள்ளத்தாக்கிலே இருப்பதைக் கவனிக்கலாம். ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இவ்வூர்களின் வழியே சென்றனர் அல்லவா? ஆகவே இப்போக்கு வரவும் பாதையும் இவ்வூர்களின் வழியாகவே சென்று பாலக்காட்டு கணவாய் வழியாகத் திருவஞ்சைக்களம் சென்று கொண்டிருந்தது என ஊகிக்க இடமும் உண்டு.

---

*காவேரி நதியின் தீரத்தில் பவானி, கொடுமுடியும், அதன் உபநதியாகிய ஆம்பிராவதியின் தீரத்தில் கரூரும், அதன் உபநதியாகிய குழகனாற்றங்கரையில் வெஞ்சமாங் கூடலூரும், நொய்யல் நதியின் கரையில் பேரூரும், நல்லாற்றுக்கருகில் அவிநாசி, திருமுருகன் பூண்டியும், நொய்யல் நல்லாறு இவை சேருமிடத்தில் குரக்குத்தளியும் இருக்கக் காண்க.

இப்பாதை யொன்றைத் தவிர, ஆம்பிராவதி யோரமாக மற்ெறான்று இருத்தல் கூடும் என்று அவிநாசிப் புராணத்தால் நாம் ஊகிக்க முடியும். ஏனெனில் அதனாசிரியர் சேரமான் பெருமாள் நாயனார் திருவஞ்சைக் களம் விட்டு கொங்கணைந்து அந்நதிச் சார்பாக வஞ்சி (கரூர்) சேர்ந்துப் பின் திருவாரூர் அடைந்தார் என்கிறார் அல்லவா? ஆனால் இக்கூற்று பெரிய புராணம் போன்ற பழைய நூல்களால் ஆளப்படாமையால் அதைச்சரித்திர உண்மை யெனக் கொள்ளல் அரிது. ஆகையால் இவ்விரண்டாவது பாதை இருந்த விஷயம் நமக்கு வேறு ஆதாரவு கிடைக்கு மட்டில் சந்தேகிக்கத் தக்கதே.

ஆலயங்களும், மதங்களும்:—இக்கொங்கு நாட்டில் பாடல் பெற்ற பெரும் சைவாலயங்கள் ஏழுடனே, வைப்பு ஸ்தல ஆலயங்களான பேரூரும், குரக்குத்தளியும், சிலாசாசனங்கள் வரைப் பெற்ற அண்ணூர், கோவில்பாளையம், இடிகரை, சேவூர் முதலியவற்றில் சிறு ஆலயங்களும் செழித்திருந்தன ஆகையால் முன் காலத்திலேயே சைவ சமயம் பிரபலமாகப் பரவி யிருக்க வேண்டும். ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் விஜயம் செய்த காலத்தில் அவிநாசியிலும் பேரூரிலும் ஊரார் தோரணம் கட்டி ஊரை அலங்கரித்து அவரை பூர்ண கும்பத்தோடு எதிர் கொண்டு அழைத்து பக்தியுடன் உபசரித்தலே பிரஜைகளுக்குச் சைவ சமயத்தில் இருந்த ஆர்வத்தை வெளிப்படுத்துகிறது.

ஆனால் எக்காரணத்தினாலோ, பாடல் பெற்ற வைஷ்ணவ ஆலயம் ஒன்றும் கொங்கு நாட்டில் இல்லை. தற்காலத்தில் பிரபலமாய் இருக்கும் ஒன்றிரண்டு வைஷ்ணவாலயங்க

லும் *சமீப காலத்ததுவையே. மலை நாட்டுக்குச் சென்ற ஆழ்வாராதியரும் கொங்கு நாட்டின் வழியே செல்ல வில்லை போலும். கொங்கு நாட்டு வைஷ்ணவ சமய ஸ்திதி இவ்வாறு இருக்க, மதுரை ஜில்லா ஆனைமலையில் கண்ட ஒரு சிலாசாசனத்தில், நெடுஞ்சடையன் என்ற ஒரு பாண்டியன் (இவன் கி. பி. 740 முதல் 770 வரை அரசாண்டதாக நிர்ணயித்திருக்கின்றனர்) கொங்கு நாட்டில் படையெடுத்து காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் குன்ற மன்னதோர் கோயில் எழுப்பினான் †என கண்டிருக்கிறது. இப்பாண்டியன் ஆதரவினாலே அவன் மந்திரியாய் இருந்த மதுரகவியாழ்வார் வைஷ்ணவத்தைத் தமிழ் நாடுகளில் மிகவும் பரவச் செய்தனராம். அப்படி யிருக்கையில் பேரூரில் எழுதப்பட்ட 'குன்ற மன்னதோர்' பெருங் கோயில் என்னவாயிற்று? அக்கோயில் இப்போது ஏன் இல்லை! அப்போது பிரபலமாக்கப்பட்ட வைஷ்ணவ சமயம் எப்போது எதனால் மாறுபாடு ஆயிற்று?

---

*தற்காலத்தில் கொங்கு நாட்டில் பிரபலமாயிருக்கும் வைஷ்ணவ ஆலயங்கள்-காரமடை, ஸ்ரீனிவாசபுரம் என்கிற மொண்டிபாளையம்.

†ஆனைமலைச்சாசனத்தின் பகுதி:—

"கொங்க பூமி அடிப்படுத்துக் கொடுஞ்சிலை பூட்டிழிவித்துப்
பூஞ்சோலை
அணிபுறவிற் காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத் திருமாலுக்
கமர்ந்துறையக் குன்ற மன்னதோர் கோயிலாக்கியும்
ஆழிமுன்னீரகழாக அகல் வானத்தகடுருஞ்சும்
பாழிநீண் மதில் பரந்தோங்கி...............
..................................................................."

என்று தோன்றும் வினுக்கள ஆராயததககவை. இம்மாறு பாட்டிற்குச் சுந்தரமூர்த்திகள் விஜயம் காரணமாயிருக்கக் கூடுமா? • ஏனெனில், • சுந்தரமூர்த்திகள் அப்பாண்டியன் படையெடுப்புக்குப் பின்னரே பேரூருக்கு விஜயம் செய்த னரன்றோ?

மறறும், இந்நாட்டில் அநேக குன்றுகளில் முருகக்கடவுள் சந்நிதிகள் உண்டு. அவைகள். இந்நாட்டு ஜனங்களால் மிகவும் பாராட்டப்பெறுகின்றன, முருகக் கடவுள் ஆரியத் தக் கலப்புக்கு முன்னரே தமிழரால் கொண்டாடப் பெற்ற தமிழ்த் தெய்வம் என்று பண்டிதர்கள் எண்ணுகிறபடியால், அக்கடவுள் சந்நிதிகளும் மிகப் பழையவைகளாயிருக்கலாம். ஆனல் சுந்தரமூர்த்திகள் காலத்து ஆதாரவுகள் எவையாலும் அவைகளுடைய நிலைமையைக் கண்டு பிடிக்கத்தகுமாறு ஒன்றும் கூறப்படவில்லை. எனினும், சுமார் கி. பி. 1500ல் வாழ்ந்த அருணகிரி சுவாமிகள் அவைகளில் பலவற்றிற்குத் * திருப்புகழ் பாடியிருக்கிறார். ஆனதினல் அவர் காலத்திற்கு முன்னரே அக்கோயில்கள் பிரசித்தமடைந்திருந்தன எனலாம்.

மேலும், போளுமாம்பட்டியிலும் திரிமூர்த்தி மலையிலும் விஜயமங்கலத்துக் கருகாமையிலும் ஜைன சம்பந்தமான சில ஆதாரங்கள் தென்படுகின்றன என்கிறார்கள். அவைகள் உண்மையாயிருந்தால், சுந்தரமூர்த்திகளுக்கு

*கொங்கு நாட்டில் திருப்புகழ் பாடப்பெற்றவை சில-மருதமலை, குருடி மலை, பேரூர், அவிநாசி, சென்னிமலை, சிவமலை, தென்சேரி மலை, அழகு மலை, ஊதியூர் மலை முதலியன.

வெகுகாலத்திற்கு முந்தியவையா யிருக்கலாம். அப்படி யானல் பல்லவ ராஜ்ஜியத்தில் ஜைனமதம் பிரபலமாயிருந்த போது இக்கொங்கு நாட்டில் அது பரவி யிருக்கலாம். *என்றல் சுந்தரமூர்த்திகள் காலத்து நூல்கள் அதைப்பற்றி ஏன் கூறவில்லை? அல்லது, சுந்தரமூர்த்திகளுக்குப்பின் காலத்தில மைசூர் இராஜ்ஜியத்தில் ஜைனமதம் பிரபலமாயிருந்த போது இக்கொங்கு நாட்டில் அது பரவியுமிருக்கலாம். அதற்கும் நூல்கள் மூலமான ஆதாரவுகள் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனல் அதைப்பற்றி நாம் ஆராயவேண்டிய அவசியம் இங்கே இல்லை.

திரிமூர்த்திமலைப் பாங்கர் துவைத மத வாசிரியரான மத்வாசாரியர் தமது மதத்தை விருத்தி செய்ததும், கரூருக்குப் பக்கத்தில் நெரூரில் இருந்த சதாசிவப் பிரமத்தினல் அத்வைதம் விருத்தியானதும், சுந்தரமூர்த்திகளுக்கு வெகுகாலத்திற்கு பிந்தியவையானதினல் அவற்றை நாம் ஆராய வேண்டியதில்லை.

காலஸ்திதி:—ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொங்கு நாட்டை விஜயம் செய்தது கி. பி. ஒன்பதாம் நூற்றண்டு. அக்காலத்தில் இக்கொங்கு நாடு மிகவும் அமைதியாய் இருந்தது. சிவபெருமான் ஆக்ஞையினல் வந்த வேடுவர் தவிர மற்ற எந்த அரசராலும் சுந்தரமூர்த்திகள் யாதொரு இடையூறும் அடையவில்லை என்பதே அதற்குச் சாட்சியாகும்.

---

*பல்லவர் காலத்திருந்த ஸ்ரீவாகீச மூர்த்திகளும் தம் க்ஷேத்திரக் கோவையில், "பேரூர் பிரமபுரம் பேராவூரும்" என்று கொங்கிற் பேரூரைக் குறிக்கிறதாகச் சொல்லுகிருர்கள்.

அக்காலத்தில் இந்நாட்டின் மீது படையெடுப்புகளும் உண்டாகவில்லை. முன்னமே நாம் கூறியபடி அப்போது * பல்லவர்கள் தொலைந்திருந்தார்கள்; சோழர் முன் வரவில்லை; பாண்டியன் வெற்றியடைந்துப் பின்பு பின்னடைந்திருந்தான்; வடக்கே சிறப்போடு ஆண்டு வந்த சாளுக்கிய அரசன் அமோகவர்ஷன் ஆதரவின் கீழ் காங்கேயர்கள் கொள்ளேகாலத்திற்குச் சமீபத்திலுள்ள தலைக்காட்டை ராஜதானியாகக் கொண்டு கொங்கு நாடு முழுவதும் அமைதியுடனே யரசாண்டு வந்தார்கள். அவ்வரசர்கள் சேரமானுடன் நட்பு பூண்டிருத்தல் வேண்டும். எனெனில், சேரமான் பெருமாள் அவ்வரசர்கள் நாட்டின் வழியே சென்றதை அவர்கள் தடுக்கக்கிடையாது. மேலும் அந்நாள் வரை விரோதிகளாயிருந்து போராடிவந்த பல இராஜகுடும்பங்களுக்குள்ளும் அமோகவர்ஷனுடைய மேலான இராஜதந்திரத்தினால் சமாதானமும் கல்யாண சம்பந்தங்களும் ஏற்பட்டு அதன் காரணமாக அரசர்களும் பிரஜைகளும் அமைதியோடு வாழ்ந்து வந்தார்கள். அப்போது கொங்கு நாட்டை இரண விக்ரமனும் அவனுக்குப்பின் அவன் மகன் இராஜமல்லனும் (கி. பி. 840—871.) அமைதியுடனும் செழிப்பாகவும் ஆண்டு வந்தனர். முன்பு வெருகாலமாக சேர, சோழ, பாண்டியரான பெரிய அரசர்

---

*கருமையார் தருமனார் தமர் நம்மைக் கட்டிய கட்டறுப்பிப்பானை
யருமையாத் தன்னுலகந் தருவானை மண்ணுலகம் காவல் பூண்ட
வுரிமையாற் பல்லவர்க்குத் திறை கொடாமன்னவரை மறுக்கஞ் செய்யும்
பெருமையாற் புலியூர்ச்சிற்றம்பலத் தெம்பெருமானைப் பெற்றா மன்றே.

கோயிற்றிருப்பதிகம்-செ-4.

கள் போர் செய்வதற்கு இரணகளமாக உபயோகிக்கப்பட்டிருந்த இக்கொங்கு நாடு அப்போது மிக்க அமைதியுடன் அரசாளப்பெற்று வந்தபடியினாலே, ஸ்ரீ சுந்தரமூர்த்திகளும் தமது விஜயங்கள் புரியவும் அங்கு சைவசமயத்தை பரவச் செய்யவும் தகுந்த அனுகூலங்கள் அடைந்தனர் அன்றோ! ஆனால் அவ்விதம் ஆண்டுவந்த அரசர்களின் பெயரை சுந்தரமூர்த்திகளாவது சேக்கிழார் சுவாமிகளாவது ஏன் கூறவில்லை எனவினவலாம். சுந்தரமூர்த்திகள் விஜயம் செய்த ஊர்களுக்குடுவெகுதூரத்திலும் ஹாசனூர் மலைத்தொடர்களுக்கு அப்பாலும் போக்கு வரவு செய்தற்கு அரிதான இடத்திலும் உள்ள தலைக்காட்டில் அவ்வரசர்கள் வசித்து வந்தார்கள்; மேலும், சைவபக்தியே மேற்கொண்ட அடியார்களுக்கு எவராகிலும் நேரில் அனுகூலமாவது பிரதிகூலமாவது செய்தாலல்லது அவ்வடியார்களுடைய கோசரத்திற்கு அவர்கள் வரமுடியாது; அப்படிப்பட்ட காரியமும் அமைதியே குணமாகக்கொண்ட இத்தலைக் காட்டு மன்னர்கள் செய்ய இயலாதவர்களே ஆவர்; ஆகையால் அப்படிப்பட்ட அரசர்கள் பெயரை சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சேக்கிழார் நாயனாரும் குறிக்கவேண்டிய நியாயம் இல்லையல்லவா?

---

V.

அற்புதங்கள்:— ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கொங்கு நாட்டிற்கு வந்த காலத்தில் இயற்கையமைப்பிற்கு மாருகவும் மானுட அனுபவத்திற்கு மீறினதாகவும் தோன்றும் சில சம்பவங்கள் நடந்தன என நூல்கள் கூறுவதை நாம் பார்த்தோம். அவைகளை எது வரை நாம் நம்புவதென்றும் சரித்திர பூர்வமாக எம்மட்டும் எடுத்தாளவேண்டியதென்றும் நாம் இங்கே ஆராயவேண்டுமாறு நேரிடுகிறது. அவற்றில் முக்கியமாய்த் தோன்றும் சில வற்றை இங்கே கூறுவோம்.

1. ஈசனருளால் வேடுவர் ஆறலைத்தது:— சுந்தரமூர்த்திசுவாமிகள் பெரும்பொருளோடு திருமுருகன்பூண்டியின் அருகிற்செல்லும்போது சிவபெருமான் தம்கணங்களை வேடுவர்களாக்கி பொருள்கொண்டேகும் ஆட்களை அடிக்கவும், குத்தவும், மிரட்டவும், செய்து பொருளைக்கவரச்செய்தனர்; சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதைக் குறித்துப் பதிகம் பாடவே கோயில் முன்னிலையில் தம் கணங்கள் ஆகிய வேடுவரை அப்பொருளைக் குவிக்கச் செய்தருளினர்; அப்படிக் குவித்த பொருளை நாயனர் பெற்றுக் கொண்டு போனர். இதுவே ஆறலைத்த விருத்தாந்தம். இதில் மனித சுபாவத்திற்கு எட்டியுள்ளது சிவபெருமான் சம்மந்தப்பட்ட பாகம் ஒன்றே. அது ஒழிப எஞ்சியுள்ள சரிதம் எக்காலத்தும் நடக்கத்தக்கதே. மேலும், சேக்கிழார் சுவாமிகள் தமது நூலை தேவாரத்தையே ஆதாரவாகக் கொண்டு இயற்றியுள்ளார் அன்றோ?

அப்படியாயின் சிவபெருமானைச் சம்பந்தப் படுத்திய இச்சரித பாகம் தேவாரத்தில் உண்டா? என்ற விஷயம ஆராயத் தக்கது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுருகன் பூண்டியில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானிடம் தாம ஆறலைப்புண்டதைச் சொல்லி குறை கூறினபோது சிவபெருமான் தான் அதற்குக் காரணமாயிருந்தவர் எனக்குறித்துக் கூறவில்லை. ஏனெனில் அவர் தான் காரணர் என்று அப்போது சுவாமிகள் அறிந்திருக்க முடியாது. ஆனால் பறிக்கப்பட்ட பொருள் திரும்பப் பெற்ற காலத்து அறிந்திருக்க முடியும. அப்படி ஈசன் அருளால் அவ்வாறலைப்பு உண்டாயிற்று என்றால், பின்னொரு காலததில் அவ்விஷயத்தை கூற நேரிடும்போது அதை விவரித்திருப்பார் அல்லவா? அப்படியாவது நம் நாயனர் கூறினவர் அல்லர். ஏனெனில் சுவாமிகள் அடுத்த முறை செய்த விஜயத்தில அவிநாசியில் அருளிய திருப்பதிகத்தில் "கொங்கே புகினும் கூறை கொண்டாறலைப்பாரிலை" என்று வேடுவர் ஆறலைப்பது அந்நாட்டில் சகஜம் என்ற தமது பழைய அனுபவத்தை எடுத்துக் கூறினரேயன்றி *ஈசனருளால் அவ்வாறலைப்பு நேர்ந்த தென்பதைச் சொன்னவரல்லர். மேலும் அது ஈசனருளால் நேர்ந்

*உருவமும் பேரும் குணமும் இல்லாத எம்பெருமான் எந்தக் காரியத்தின் பொருட்டு உருவமும் பேரும் குணமும் கொண்டு வந்தாலும் செய்கைக்குத் தக்கவாறு திருமேனி கொண்டெழுந்தருளுவார். அவ்விதமே தம் கிருவிகளாகிய கணங்களையும் வரச்செய்தருளுவார். இது விறகு விற்றது, மண் சுமந்தது, குதிரை விற்றது முதலிய வரலாறுகளால் விளங்கும் அவைபோலவே இங்கும் தம் கணங்களை ஆறலைப்புக் கேற்ற வடிவேடுவராக்கினர் என்றும், சர்வ த்திற்கும் மூலகாரணராகிய முதல்வனே இந்நிகழ்ச்சிக்கும் காரண

தை தாம் அறிந்தபின் பாடினார் என்றால் அவர் பிரயோகித் திருக்கக்கூடிய பதப்பொலிவும் பொருட்பொலிவும் இதை விடப்பன்மடங்கு அதிகமாயிருக்கும் அல்லவா? ஆகையால் மூலநூலில் தொனிக்காத சம்பவத்தை தம் பக்தியின் மிகுதி யால் சேக்கிழார் சுவாமிகள் தம் நூலில் கூறினர் என்று கொள்ளலாம். ஆயினும் இவ்வொரு காரணத்தைக்கொண்டு மாத்திரம் அவ்வபிப்பிராயத்தைக் கொள்ள முடியுமா?

மற்றும் திருமுருகன்பூண்டிப்பதிகத்தில் "வடுக வேடு வர்" என்று கொள்ளை கொண்ட வேடுவரின் வகையையும் "விரவலாமை கூறி" என்று அவர் செய்யும் தொழிலின் விசேஷத்தையும் சுவாமிகள் விவரமாகக் கூறியுள்ளதால் அவ்வாறலைப்பு உண்மையான வேடுவரின் செய்கையேயன்றி திருவிளையாட்டிற்காக எம்பெருமான் செய்வித்தது எனத் தோன்றுது.

பின்காலத்தில் அவதரித்த இராமானுஜருடைய திவ் விய பிரபாவத்தைக் கேட்டுணர்ந்த வேடுவர்கள் அவரைச்சந் தித்த காலத்தில் பரமவைஷ்ணவர்களாகி விளங்கினார்கள் என்று அவரது சரித்திரத்திலுல் அறிகிறோம். அதைப்போ

ராயிருத்தலாலே இது நிகழ்ந்தது என்றும் அதுபற்றித்தான் சுந்தர மூர்த்திகள் ஈசனிடம் சென்று முறையிட்டனர் என்றும் அதன்றி வேறு சாமான்ய மனித வேடர்களால் இவ்வாறலைப்பாகிய அபசாரம் நடத்தவும் நடத்தி மீண்டுய்யவும் கூடாமல் திருஞான சம்பந்தரால் சபிக்கப்பட்டு உயிர் துறந்த சாரிபுத்தனைப்போல் அவர்கள் உயிர் துறக்கப் பெறுவர் என்றும் இவ்வித காரணங்களால் இவ்வாறலைப்பு ஈசனருளால் நிகழ்ந்த நிகழ்ச்சியே என்றும் கூறி சேக்கிழார் திரு வாக்கை கடைப் பிடிப்பதற்குக் காரணம் கூறலாம்.

லவே சுந்தரமூர்த்தி சுவாமிகளது முதல் விஜயத்தில் கொள்ளையிட்ட வேடுவர் அவர் மகிமைக்கு ஈடுபட்டு அவரது சைவ சமய அபிவிருத்திக்கு உட்பட்டு தம் கொடுந் தொழிலை விட்டனர் என்று ஏன் கொள்ள கூடாது? இப்பொருள் "எம் பெருமானை நினைந்தக்கால் கொங்கே புகினும் கூறைகொண் டாறலைப்பாரிலே" என்பதில் தொனிக்கிறது.

2. முதலை பிள்ளை உமிழ்ந்தது:—அவிநாசியில்நடந்ததாக கூறும் இவ்விருத்தாந்தம் இயற்கைக்கு விரோதமாய் தோன்றுகிறதல்லவா? இறந்த உயிர் திரும்பிவருவதும், அதிலும் அன்றுவரை வயது நிரம்ப உடல் பெறுவதும், முதலை வயிற்றில் ஜீரணமாய்ப்போன உடல் திரும்பி உருவம் ஆகி வெளிவருவதும் இக்காலத்து பௌதிகசாஸ்திரிகளால் ஏற்றுக்கொள்ளப் பெறுதவைகள். இவ்விருத்தாந்தத்தின் உண்மை எவ்வாராயினும் ஆகுக. அதனை ஒரு தத்துவ விஷயமான உள்ளுரை உவமமாகக் கொள்ளுவோமானால், அது ஒரு ஆழ்ந்த படிப்பினையை நமக்கு ஊட்டுகிறது என்பதை நாம் அறிவோம். இக்கருத்தினையே புலவர் பெருமானை சிவப்பிரகாசசுவாமிகள் தம்

"வாங்குசிலை புரையுமுடல் எனும்குளத்தில் மூல
மலமெனுமோர் வெங்கராவின் பகுவாயில் நின்றும்
நீங்கில்உயிர் எனும்பனவக் குலமகனை ஆதி
திரோதாயி என்னுமொரு வெந்திறல்கூற் றுவனால்
ஓங்குறுசா தாந்தம்எனப் பெயரியஅக் கரையில்
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடும் கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நெல்மலைமுன் கொண்ட அருள் கடலே."

(நால்வர் நான்மணிமாலை)

6515



என்ற அருமைச் செய்யுளால் உலகத்திற்கு அளித்திருக்கின்றனர். அருட்கடலாகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் நிலையில்லாத உடல் என்னும் குளத்தில், மூலமலம் என்னும் முதலையின் வாயினின்று, உயிர் என்னும் பிராமணப்பிள்ளையை, ஆதிதிரோதாயி என்னும் யமனுலே, நாதாந்தம் என்னும் குளக்கரையிலே உமிழ்வித்து, சிவம் என்னும் அப்பிள்ளையின் தந்தையோடு சேர்ப்பித்தார் என்பது அதன் பொருள். அதாவது சற்குரு மூலமலத்தினுல் இவ்வுடலில் பிணைக்கப்பட்ட ஆன்மாவை திரோதாயினுல் விடுதலைசெய்வித்து சிவத்தோடு கூட்டுவித்தருளினுர் என்ற தத்வார்த்தத்தை இது விளக்குவதாகும். இவ்விதம் ஒரு உன்னதமான தத்துவத்தை வெளியிடுவது இவ்விருத்தாந்தம் என்றுல், இது ஒரு வெறும் கட்டுக்கதை எனக் கொள்ளல் கூடுமோ? *

3. பள்ளுப்படலத்திருவிளையாடல்:—இவ்விஷயம் பெரிய புராணத்தில் கூறப்படவில்லை யென்றும் பேரூர்ப்புராணத்தில் தான் முதன்முதலாகக் கூறப்பட்டுள்ளதென்றும் முன்

---

*மற்றும், சிருஷ்டிக் காலத்திலே உலகமும் அதனுள் அடங்கிய சகல பொருள்களும் மாயையில் ஒடுங்கியிருந்தவை உருப்பெற்று தோன்றுதல் அடையும் என்பது பௌதிக, தர்க்க, தத்வ சாஸ்திரிகள் யாவரும் ஒப்புக் கொள்ளும் உண்மையாகும். வஸ்துக்கள் உருவழிந்த போதிலும் நாசம் அடைவதில்லையென்பது பௌதிக சாஸ்திர உண்மைகளில் ஒன்றுகும். ஆகவே ஒரு காலம் உருவழிந்து சென்று ஒடுங்கிய பார்ப்பனச் சிறுவன் மற்றொரு காலம் ஏகதேசத்திலே சிருஷ்டிக் கிரம நியாயம் பற்றி மீளவும் மாயையிலிருந்து உருப்பெற்று வரவும் நியதி உண்டு. ஆகையால் அச்சம்பவத்திற்கு இந் நியாயம் கற்பிப்பதுவும் இழுக்காக மாட்டாது.

னமே கூறியிருக்கிறோம். இத்தேசத்தில் நிலத்தை உழுது அதில் விதையை நடுகிற காரியத்தையும் அப்பருவத்தையும் சிறப்பித்து உற்சவங்கள் கொண்டாடுவார்கள். மற்றும் எந்தக் காரியத்திற்கும் ஒரு தெய்வத்தையாவது அல்லது ஒரு பக்தரையாவது முன்னிலைப்படுத்தியும் அல்லது அவர்களை காரணப்படுத்தியும் அக்காரியத்தைத்தொடங்குவதும் முடிப்பதுவும் நம்மவர்களுக்குத் தொன்று தொட்டு ஏற்பட்டதோர் வழக்கம். அவ்விதமே இப்பன்னிரண்டு படலத் திருவிளையாடலும் ஒரு ஆரம்பத்தைக் கொண்டும் இருக்கலாம்.

மேற்கூறிய அற்புதச்செயல்களில் ஒவ்வொன்றையும் ஒருவர் நம்புவதும் நம்பாததும் அவரவருக்கு அவ்வவ்விஷயத்தில் இருக்கும் அபிமானத்தையும் பொறுத்திருக்கலாம். ஆகையால் அதனை மேற்கொள்ளாது அவ்விஷயங்களின் சாராம்சங்களையும் சரித்திர அம்சங்களையும் எடுத்துக்கொள்வது அவரவர்கடமை.

## vi

திருப்பதிகங்கள்:— சுந்தரமூர்த்திசுவாமிகள் கொங்கு நாட்டில் விஜயம் செய்தபோது அருளிச்செய்த திருப்பதிகங்கள் நாம் முன்னமே கூறியுள்ள நான்குமே. இவைத் தவிர கொங்கு நாட்டைப்பற்றி ஊர்த்தொகையில் இரண்டு பாசுரங்களும் கோயிற்றிருப்பதிகத்தில் ஒரு பாசுரமும் உண்டு. மிகக்குறைந்த தொகை கொண்ட இப்பாசுரங்களிலும் சுவாமிகளது கவித்திறத்தின் உயர்வை அறியக்கூடிய அம்சங்கள் பல உள. அவற்றில் நமக்குத் தெரியக் கூடியவை சில விவரிப்போம்.

1. சுவாமிகள் தாம் எம்பெருமானை துதி செய்து பதிகங்கள் பாடியகாலங்களில் அவைகளில் தாம் அனுபவித்த சம்பவங்களைக் கூறியிருக்கிறார். அவிநாசியில் முதலைவாய்ப் பிள்ளை உமிழச்செய்ததை அவிநாசிப்பதிகத்திலும் திருமுருகன்பூண்டிக்கருகில் வேடுவர் பால் பறிகொடுத்ததை அவ்வூர்ப்பதிகத்திலும், மீண்டும் அந்நாட்டில் வேடுவர் ஆறலைக்கும் மிகுதியை அவிநாசிப்பதிகத்திலும் குறிப்பிட்டிருப்பதே அதற்கு உதாரணமாம். மேற்றும் கொடுமுடிப் பதிகத்தில் ஸ்ரீ பஞ்சாட்சரத்தை தான் எக்காலமும் மறப்பதில்லை என்று தன் உள்ளுக்குள் உறைப்பாய் உள்ள சைவமேம்பாட்டை வெளிப்படுத்திருக்கிறார். இவ்விதம் தம் ஜீவிய சரித்திரத்தின் அம்சங்களை அவரது பாசுரங்களே உட்கொண்டிருப்பது மிக அருமை. ஆகையால் அவரோடு சமகாலத்தில் இருந்தவர்கள் அவரது சரித்திரத்தை எழுதிவைக்கா

மற்போனபோதிலும் அவரது பாசுரங்களே அவரது சரித்திரத்திற்கு ஆதாரங்களாக ஏற்பட்டிருப்பது நம் நாடு செய்த புண்ணியத்தின் பயனாகும்.

2. இவ்விதம் தமக்கு நேரிட்ட சம்பவங்களை திம்பதிகங்களில் குறித்துள்ளது மாத்திரமேயல்லாமல் தாம் சென்ற பதிகளில் ஆங்காங்கு இருந்த விசேஷங்களையும் குறித்துள்ளது மிகவும் பாராட்டத்தக்கது. முக்கியமாக அவர்சென்ற திருப்பதிகளின் மூர்த்தியின் பெயர், ஊர்களின் பழைய பெயர், சமீபத்து ஆறு, தீர்த்தம் இவைகளின் பெயர்கள், முதலியவற்றை சுவாமிகள் குறித்திருப்பதைப் பார்க்கலாம். போக்குவரவு கடினமாயிருந்த அக்காலத்தில் நேரில் சென்றுலொழிய மேற்கூறிய விஷயங்கள் அறிவது கடினமாகையால் சுவாமிகள் அத்திருப்பதிகளுக்கு நேரிலேயே அநேகமாகச் சென்றிருக்கவேண்டுமென்று தெளிவாகிறது. அவிநாசியில் குளத்திறகருகில் சோலை இருப்பதும், திருமுருகன்பூண்டியில் முல்லை விசேஷமாயிருந்ததும், வெஞ்சமாங்கூடல் சிற்றாறதன்கீழ்க்கரையில் இருப்பதுவும், அவ்வாற்றினால் குளங்கள் நிறைவதுவும, அத்தலத்து ஈசன் பெயர் விகிர்தன் என்பதுவும், கொடுமுடியின் பழைய பெயர் கறையூர் என்பதுவும், பேரூரில் சுவாமியின் பெயர் பட்டிப்பெருமான் என்பதுவும், அந்த ஸ்தலத்திற்கு மற்றொரு பெயர் பிறவாநெறி என்பதுவும், முதலிய சிறப்பு விஷயங்கள் அவர்தேவாரங்களால் தெரியவருகின்றன. ஆகையால் சுவாமிகள் தமது ஆத்மார்த்தமாக ஸ்தலயாத்திரை செய்தவரல்லர் என்றும், சைவசமய அபிவிருத்திக்கும் பரோபகாரார்த்தமாகவும்

ஸ்தல விசேஷங்களை அறிந்தும் தேசத்தை விசாரித்துத்தெரிந்து கொண்டும் சென்றவர் என்றும் தெரிகிறோம்.

3. சில திருப்பாடல்களுக்குப் பொருள் கொள்ளுமிடத்து, அவற்றில் பிரயோகித்திருக்கும் சில பதங்கள் அனுவசியம் என்றும் எதுகைமோனை இவைகளுக்காகச் சேர்த்திருக்கலாம் என்றும் நமக்கு வெளிப்பார்வையில் தோன்றக் கூடிய இடங்களிலும், நாம் ஊன்றி நோக்கினால் அவைகள் அவசியமான பொருளுடனே ஒரு கருத்தைக்கொண்டே பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன எனத்தெரியவரும். வடுகவேடுவர் என்ற விடத்து வடுக என்ற பதம் அந்நாட்டில் இருந்த வேடுவரில் ஒரு வகையார் எனவும், முல்லைத்தாது கமழ் என்ற விடத்து முல்லை என்ற பதம் வெறும்வருணனை காட்டும் அடைமொழி மாத்திரம் அல்லவென்றும், முல்லை அவ்வூர் விசேஷம் என்றும், அவ்வூருக்கு முல்லை வனம் என்ற பெயர் இருந்ததென்பதைக் காட்டுகிற தென்றும், விசாரித்தால் தெரியவரும்.

4. சுவாமிகள் இயற்கை அதிசயங்களை வருணித்துப் பாடுவதில் வல்லவர் என்பதற்கு அவரது வெஞ்சமாங்கூடல் பதிகத்தில் ஏலம், இலவங்கம், தக்கோலம், இஞ்சி, இவைகளை அடித்துக் கொண்டு சிற்றாற்றில் வெள்ளம் ஓடுவதும், அவ்வாற்றின் வெள்ளம் குளங்களை நிறைப்பதும் முதலிய வருணனைகளை வெகு அழகாய்ப்பாடி யிருத்தலைக் காண்க. மற்ற வருணனைகளிலும் வல்லவர் என்பதற்கு வெஞ்சமாங் கூடல், கொடுமுடி இப்பதிகங்களில் 'நல்லார் நடமாடும்மணி யரங்கு,' 'மெல்லடிப் பாவைமார் போற்றும்' முதலிய வருணனைச்சிறப்புகளைக் காண்க.

5. பெரும்புலவர் பெருமான்கள் எல்லாம் தம் எண்ணங்களுக்குத் தக்கபடி யாப்பின் நடை, ஒலி இவைகளை அமைத்துப் பாடுவார்கள். நம் நாவலர் பெருமானும் இக் கொங்கு நாட்டில் பாடிய மிகக்குறைந்த பாடல்களிலும் அவ் வழக்கைக் காட்டி யிருக்கின்றனர். "மற்றுப் பற்றெனக்" எனும் பதிகம் எவ்வளவு இனிமையாகவும் தெளிவாகவும் அமைக்கப் பட்டிருக்கிறது! அதை இன்னிசையுடன் பாடினால் மனம் உருகி பஞ்சாட்சர உண்மையாகிய அமிர்தத்தை உட்கொண்டு களித்திருக்கும் அன்றோ? ஆனால் "கொடுகு வெஞ்சிலை" என்பதைப் பாடக் கேட்ட மாத்திரத்தில் எவ்வளவு கடுமையாயிருக்கிறது? அதன் சொற்களும் ஒலியும் வழிப்பறிக்கேற்றனவாய் அமைந்திருப்பதைப்பார்க்கிறோம். சிவநாம சங்கீர்த்தனமே கருத்தாகக் கொண்ட ஊர்த்தொகைத் திருப்பதிகத்தின் யாப்பே எவ்வளவு இனிமையாய்ப் படிந்திருக்கிறது ஆகையால் அப்பாசுரங்களில் ஆசிரியர் எண்ணத்தை அவற்றின் ஒலியே வெளிப்படுத்துகின்றன அல்லவா?

6. சுவாமிகள் தேவாரங்கள் பாடிய ஸ்தலங்கள் உள்ள நிலங்களின் நிலைமைக்குத் தகுந்தவாறு அவற்றின் பண்களும் அமைந்துள்ளதையும் காணலாம். அவிநாசி, பேரூர் இவைகளுக்குக் குறிஞ்சியும், திருமுருகன்பூண்டி, ஊர்த்தொகை, பாண்டிக்கொடுமுடி இவைகளுக்கு பழம் பஞ்சரமும், வெஞ்சமாங்கூடலுக்குக் கொல்லிக் கௌவாணமும் உபயோகித்திருப்பதைக் கவனிக்கலாம். இவற்றை யெல்லாம் உற்று நோக்கினால் சுவாமிகள் கவித்திறத்தை என்னென்று வியப்பது!

---

## vii.

முடிப்புரை:—இது காறும் கொங்கு நாட்டில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் விஜயம் செய்தகாலத்துச்சம்பவங்களும், அந்நாடு இருந்த நிலைமையும், அவர் கவித்திறமும் ஆராய்ந்தோம். மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் காலத்திற்குப் பிந்தியும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திற்கு முந்தியும் அந்நாடு எந்தஸ்திதியில் இருந்தது என்பதை அறியப்போதுமான ஆதாரங்கள் இல்லை. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்நாட்டை விஜயம் செய்த திருஞானசம்பந்தமூர்த்திகளும் திருநாவுக்கரசு நாயனாரும் பாடியுள்ள தேவாரப் பதிகங்களைத் தவிர, வேறு எதையும் வெளி நாட்டிலிருந்து இந்நாட்டில் விஜயம் செய்தவரோ அல்லது இந்நாட்டில் இருந்தவரோ எவராகிலும் எழுதி வைக்கக் காணோம். திருஞானசம்பந்தரும், திருச்செங்கோடு, பவாநி, கொடுமுடி, கரூர் இத்திருப்பதிகளையே தரிசித்துப் பதிகங்கள் பாடியுள்ளதால், வடகொங்கு புகுந்து காவேரி நதிக்கரையோரமாகச் சென்றனரேயன்றி, கொங்கு நாட்டின் மத்தியிலே புகுந்ததாக நாம் அறியோம். *திருநாவுக்கரசரும் கொடுமுடி ஒன்றைத் தவிர வேறு இடங்களுக்குச் சென்றதாகத் தெரியவில்லை. ஆகையால் அவர்கள் காலத்தில் கொங்கு நாடு இருந்த நிலைமையை, சுந்தரமூர்த்திகள் காலத்தில் அதனை அறியக்கூடிய அளவு

---

*திருநாவுக்கரசர் தேவாரம் ஊர்த்தொகையில் பேரூரைக் கூறியிருக்கிறார். ஆனால் அதற்கு அவரது தேவாரம் இல்லை.

நாம் ஆராய வழி இல்லை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்திற்குப் பின்னரும் திருவிசைப்பா பாடிய கருவூர்த்தேவர் ஒருவரைத்தவிர அருணகிரிநாதர் காலம் (கி. பி. 1450).வரையில் * எந்தப் புலவரும் நம் ஆராய்ச்சிக்குப் போதுமான நூல்களைப்பாடி வைத்ததாகத் தெரியவில்லை. கரூர்த் தேவர் திருவிசைப்பாவிலும் அவர் சரித்திரத்திலும் நாட்டின் நிலைமை அறியக்கூடிய விஷயங்கள் இல்லை. ஆகையால் ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி சுவாமிகளது சரிதம் நம் கொங்கு நாட்டின் தேசசரித்திரத்தின் ஓர் அறிகுறிக்கல் எனக் கொள்ளலாம்.




*நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் கோயமுத்தூர் ஜில்லா விஜயமங்கலத்துக் கருகில் இருந்ததாக ஒரு கொள்கை உண்டு. அவரது காலமும் 1178 கி. பி. முதல் 1218 வரை ஆண்ட குலோத்துங்கன் III உடைய காலம் என்பர்.

# அநுபந்தம் I.

## சுந்தர மூர்த்திகள் கால நிர்ணயத்தைப்பற்றிச் சில குறிப்புகள்.

1. சேரமான் பெருமாளும் சுந்தரமூர்த்திகளும் மதுரை சென்றபோது அங்கு மாமனார் அகத்துக்கு வந்திருந்த சோழனையும் அவன் மாமனான பாண்டியனையும் சந்தித்தார்கள். (பெரியபுராணம்-சேரமான்-செ 92). வரகுண பாண்டியனிடம் யாழ்ப்பாணனாயிருந்த பாணபத்திரன் பரமசிவனால் திருமுகம் பெற்று சேரமான் பெருமாளால் பரிசு பெற்றான். (திருவிளையாடல்-விறகு விற்ற படலம், திருமுகம் பெற்ற படலம், பெரிய புராணம்-சேரமான் பெருமாள் புராணம்). ஆகையால் சுந்தரர் காலத்துப் பாண்டியன் வரகுணபாண்டியனே. வரகுண பாண்டியன் 862 கி. பி. யில் பட்டத்துக்கு வந்தான் என்று மதுரை ஜில்லா ஐவர் மலைச்சாசனத்தால் தெரிகிறது.

2. இவ்வரகுணன் காலத்தவன் விஜயாலயச்சோழனாயிருக்கவேண்டும். இவ்விருவரும் நட்பு பூண்டு பல்லவ சார்வ பௌமத்தைத் தொலைக்க முயற்சித்தார்கள். உதயேந்திரச்சாசனங்களால் சோழ பாண்டியர்கள் நிம்ப வனம், சூத வனம், அழுந்தூர், மண்ணை, வேம்பில் முதலிய இடங்களில் பல்லவர்கள் மீது பொருதார்கள் எனக்கண்டிருக்

கிறது. மற்றும் அதே சாசனங்களால் அக்காலம் கி. பி. 850 எனத்தெரிகிறது. அப்போது சோழபாண்டியர் அபிவிருத்தியடையப் பல்லவர்கள் தளர்ப்பலயம் அடைந்தார்கள் எனலாம். அவ்விஷயம் சுந்தரமூர்த்திகள் தம் கோயிற்றிருப்பதிகம் செ 4 "கருமையாற்றருமனுர்" என்ற பாசுரத்தில் "மண்ணுலகம் காவல்பூண்ட வுரிமையால் பல்லவர்க்குத் திறை கொடா மன்னவரை மறுக்கஞ்செய்யும்" என்றதினால் வெளியாகிறது.

3. நம் நாயனார் காலத்தவர் நரசிங்கமுனையரையர். திருமுனை நாட்டு அரசர்களாகிய முனையரையர்கள் நரசிம்மன், இராமன் என்றவைகளேயே முறையே பெயர் வைப்பார்கள். திருநாவலூர்ச்சாசனத்தின்படி 954 கி. பி. யில் குலமாணிக்கன் இராமன் என்பவன் முனையதரையனுயிருந்தான். அவனுக்கு மூன்று தலைமுறைகளுக்கு அதாவது சுமார் 850 கி. பி. யில் நரசிங்கன் என்ற பெயரை வகித்தவனே முனையதரையனுயிருத்தல் வேண்டும். அவனே நரசிங்கமுனையரையராயிருக்கலாம்.

4. இராஜராஜச்சோழன் 1 காலத்தில் வன்றொண்டன் என்ற பெயரை ஒரு சாமானிய மனிதன் வகித்திருந்தான். அவ்வரசனும் நாயனுர் விக்கிரகத்தை ஸ்தாபித்து அதற்கு நன்கொடைகள் அளித்திருக்கிறன். நாயனுர் பெயர் அக்காலத்திலேயே பூஜிக்கப்படும் நிலைமைக்கு வந்து விட்டது என்று இவைகளால் ஏற்படும். அவ்விதம் ஆவதற்கு குறைந்தது 3, 4 தலைமுறைகள் ஆகும். இராஜ ராஜன் காலம் கி. பி. 985. ஆக சுந்தரர் காலம் சுமார் கி. பி. 850.

5. சுந்தரர் சேரமான் பெருமாள் காலத்தவர். சேரமான் கைலாயம் சென்ற செய்தியை உத்தேசித்து அவர் தான் கடைசிப் பெருமாள் எனக் கொள்வர். கடைசி பெருமாள் காலத்தில் தான் கொல்லமாண்டு ஆரம்பம் ஆயிற்று என்பர். அது கி. பி. 825ல். ஆகையால் அதுவே சுந்தரர் காலம் என்பர்.

இவ்வித பல காரணங்களால் சுந்தரமூர்த்திகள் கி. பி. 850ல் வாழ்ந்தவராயிருத்தல் வேண்டும் என்று ஊகிக்கின்றார்கள்.

# அநுபந்தம் II

## கோங்கு நாட்டு ஸ்தல மான்மியக் குறிப்புகள்.

### i பாடல் பெற்ற ஸ்தலங்கள்.

அவிநாசி. (திருப்புக்கொளியூரவிநாசி):—ஈரோடு போத்தனூர் ரயில் மார்க்கத்தில் வஞ்சிப்பாளையம் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 5 மைலிலும் திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 8 மைலிலும் உள்ளது. சுந்தரமூர்த்திகள் விஜயம் செய்து முதலை பிள்ளையுமிழச் செய்த ஸ்தலம். அதற்கு அவர் தேவாரம், 'எற்றான் மறக்கேன்' என்பது. சுவாமி-அவிநாசியப்பர்; அம்மன்-பெருங்கருணை நாயகி; விருக்ஷம்-பாதிரி; நதி-நல்லாறு; (திருநள்ளாறு) தீர்த்தம்-காசி தீர்த்தம்; (கோயிலுக்குள் உள்ளது); குளக்கரையில் சுந்தரமூர்த்திகள் கோயில் உண்டு. இக்கோயில் ஒரு சுந்தரபாண்டியன் காலத்தில் பிரதிஷ்டிக்கப்பட்டது என்று கல்வெட்டு ஒன்று கூறும். நல்லாற்றுக்குக் கோயிலிலிருந்து ஊருக்கு புராதன இந்து ராஜாக்கள் காலத்துப் பாலம் ஒன்று உண்டு. கோயில் புராதனக் கட்டடம், கல்வெட்டுகள் பல. பிரகாரம் புதிப்பிக்கப்பட்டு வருகிறது. அவைகளில் ஹாய்சல அரசன் வீரவல்லாளன் (சகம் 1205) காலத்ததும் உண்டு. புராண ஆசிரியர் இளையான் கவிராயர்; இவர் பெயர்வைத்தியனாதன் இளையான் என ஒரு செய்யுள் கூறுகிறது.

2. திருமுருகன்பூண்டி:—அவிநாசியிலிருந்து கிழக்கே 3 மைலிலும் திருப்பூரிலிருந்து வடமேற்கு 5 மைலிலும் உள்ளது. முருகக்கடவுள் பூஜித்தது. சுந்தரமூர்த்திகள் விஜயம் செய்தபோது வேடுவரால் ஆறலைப்புண்டது. அதற்குப்பதிகம் 'கொடுகு வெஞ்சிலை' என்பது. சுவாமி-முருகேசுவரர் (முருகநாதர்); அம்மன்-முயங்கு பூண்முலையம்மை விருக்ஷம்-முல்லை (மாதவி); நதி-நல்லாறு; தீர்த்தம்-இடதுபுறம் முருக தீர்த்தம் வடபுறம், பிரம்ம தீர்த்தம்; பைத்தியமும் மற்ற வியாதிகளும் தீர்த்துக் கொள்ள சதாகாலம் ஜனங்கள் வருவதுண்டு. சுவாமி-மேற்கு சந்நிதி. மற்ற ஆலயங்கள்-கூப்பிடு பிள்ளையார், மகாவிஷ்ணு, மாதவி வனேசுவரர் (பெரிய ரிஷபம் உண்டு). ஆலயம்-பூமி மட்டத்துக்குக்கீழ் புராதனமானது; கல் வெட்டு பல; முன் மண்டபம் புதிது. அறுபத்துமூவர்-நல்ல வேலைப்பாடு. ஊரில் கல் சிற்பிகள் விசேஷம். புராண ஆசிரியர்-வாசுதேவமுதலியார்.

3. கொடுமுடி:—(திருப்பாண்டிக் கொடுமுடி). ஈரோடு திருச்சி மார்க்கத்தில் கொடுமுடி ஸ்டேஷன். மூவரும் விஜயம் செய்திருக்கின்றனர். சுந்தரர் 'மற்றுப்பற்றெனக்கின்று'; சம்பந்தர்-'பெண்ணமர் மேனி'; அப்பர்-'சிட்டனைச் சிவனை' எனும் பதிகங்கள்; சுவாமி-கொடுமுடி யீசுவரர்; அம்மன்-பண்மொழியம்மை; (சௌந்திரவல்லி) தீர்த்தம்-காவிரி; விருக்ஷம்-வன்னி. ஆலயத்தில் சுவாமிக்கும் அம்மனுக்கும் மத்தியில் இரங்கநாதர்-சேஷசயன நிலை; தெற்கு பிரம்மன் சந்நிதி. கோயில் கட்டடம் புதிது. கல்வெட்டு அழிக்கப்பட்டன; வேறு ஆலயம்-கருப்பண்ணசாமி கிராம

தேவதை, ஆடுபலி அதிகம்; புராண ஆசிரியர்-வெங்கிட ரமணதாசர்.

4. கரூர்:—(திருக்கருவூரா நிலை) ஈரோடு திருச்சி மார்க்கம் கரூர் ஸ்டேஷனுக்கு மேற்கு ஊரில் ஒரு மைலில் ஆலயம் உள்ளது. சம்பந்தர் விஜயம்-தேவாரம் 'தொண்டெலாம்.' எறிபத்தநாயனார், புகழ்ச்சோழ நாயனார், கருவூர்த்தேவர் (திருவிசைப்பா) சரிதங்கள் நடைபெற்ற ஸ்தலம்; கோயிலில் கருவூர் தேவர்சந்நிதியும் உண்டு. சுவாமி-பசுபதீசுவரர், அம்மன் கிருபாநாயகி, சௌந்தரியநாயகி ஆக இரண்டு சந்நிதிகள். தீர்த்தம்-ஆம்பிராவதி. கோயில்கட்டடம் புதிது-மண்டபங்கள் பெரியவை. கல் வெட்டுகள்-அழிக்கப்பட்டன வேறு ஆலயங்கள்-தெற்கு 3 மைல் தாநதோன்றிமலை (விஷ்ணு); வடக்கு 3 மைலில்-வெண்ணெய்மலை (சுப்பிரமணியர்); கிழக்கு 9 மைலில் நெரூர்-சதாசிவப்பிரம்மம் சமாதி. புராண ஆசிரியர்-சகம் 1540ல் சத்திய ஞானியார் மாணவர்; பதிப்பாசிரியர்-கந்தசாமி முதலியார்.

5. வெஞ்சமாங்கூடலூர்:—கரூரிலிருந்து தென்மேற்கு 11 மையில் குழகனாற்றைத்தாண்டி தென்கிழக்கு இட்டேரி வழி 3 மையில் குழகனாற்றங்கரையில் உள்ளது. சுந்தரர் தேவாரம்-'எறிக்குங்கதிர்' சுவாமி-விகிர்தேசுவரர் அம்மன்-விகிர்தேசுவரி, நதிகள்-குழகனாறு, சிற்றாறு; கோயில்-புராதனம், சிகிச்சையாய் உள்ளது; பூமிமட்டத்துக்கு வெகு ஆழம், கல்வெட்டு-அதிகம்; மதில்கள்-அகழ் போல் இருக்கின்றன. அவைகளில் மீன், மகரம், பாம்பு இவை செதுக்கப்பட்டிருக்கின்றன. வெஞ்சனுடைய கோட்டைக்குறிப்புகள் உண்டு. புராணம்-உண்டென்பர் அகப்படுகிறதில்லை.

6. பவானி:—(திருநணு) ஈரோடு ஸ்டேஷனிலிருந்து வடக்கு 9 மைல். காவிரியும் பவானியும் சங்கமமாகுமிடத்தில் உள்ளது. சம்பந்தர்-தேவாரம்-'பந்தார் விரன்மடவார்;' சுவாமி-சங்கமேசுவரர் அம்மன்-வேதநாயகி; விருக்ஷம்-இலந்தை; தீர்த்தம்-பவானி காவிரி சங்கமம்; ஆலயத்துக்குள்-ஆதிகேசவப் பெருமாள். வேறு ஆலயம்-ஊராய்ச்சிக்கோட்டை. 3 மைல். புராணம் ஆசிரியர்-வாசுதேவமுதலியார்.

7. திருச்செங்கோடு:—(கொடிமாடச்செங்குன்றூர்) சங்கரிதுர்க்கம் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கு 5 மைலில் பாறையாயுள்ள குன்றின் மேல் உள்ளது. சம்பந்தர் பதிகம் 'வெந்தவெண்ணீறு'; பனிக்காலத்தில் அடியார்களில் நளிர்ச்சுரம் வரவும் அது நீங்கப்பாடியது. 'அவ்வினைக்கிவ்வினை' எனும் திருநீலகண்டப்பதிகம். சுவாமி-மேற்குச்சந்நிதி-அர்த்தநாரீசுவரர்; அம்மன்-அர்த்தநாரீசுவரி; ஆலயத்தில்-சுப்பிரமணியர்-சந்நிதி-கிழக்கு முகம்-திருப்புகழ் பெற்றது. விஷ்ணு சந்நிதியும் உண்டு. அடிவாரத்தில் ஊரில் சிவாலயம் உண்டு. சிகரத்தில் வரட்டுப்பாறையை குழந்தையில்லாதவர் குழந்தை பெறச் சுற்றும் வழக்கம் இருந்தது. திருப்பணிமாலை ஒன்றுண்டு. புராண ஆசிரியர்-வீரகவிராஜ பண்டிதர்.

---

## ii. வைப்புஸ்தலங்கள்.

---

பேரூர்:—(மேலைச்சிதம்பரம்; பிறவாநெறி) கோயமுத்தூர் ஸ்டேஷனிலிருந்து 3 மைலில் உள்ளது. சுந்தரவிஜயம்-கோயிற்றிருப்பதிகத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. பள்ளுத்

திருவிளையாடல் நடந்த இடம். சுவாமி-பட்டீசுவரர், அம்மன்-பச்சைநாயகி, விருக்ஷம்-அரசு; நதி-காஞ்சிமாநதி (நொய்யல்). வேறு ஆலயங்கள்-அரசம்பலவாணர் ஆலயம், தக்ஷிண கைலாசம். விசேஷங்கள்-நச்சுப்பொய்கை, இறவாப்பனை, பிறவாப்புளி முதலியன. கனகசபை-சிற்பம் பெருமை வாய்ந்தது, டிப்பு சுல்தானும் கண்டு மகிழ்ந்து இடிக்க மனம் தோன்றவில்லை; 300 வருஷத்துக்கு முன் அளகாத்திரி நாயகனுல் கட்டப்பட்டதென்பர். அவன் உருவம் கோபுர வாயிலில் உண்டு. கர்ப்பகிருகம்-புராதனம்-கல்வெட்டு பல. அறுபத்து மூவர் பிரகாரம் புதியது. சமீப ஆலயங்கள் 6 மைலில் மருதமலை; 15 மைலில் வெள்ளி மலை; 10 மைலில் அனுமக்குமார், குருரிஷிமலைகள். திருப்புகழ் உண்டு. புராண ஆசிரியர்-கச்சியப்ப முனிவர்.

2. பேரியபாளையம்:—(குரக்குத்தளி) திருப்பூர் ஸ்டேஷனிலிருந்து கிழக்கு 5 மைலிலும் ஊளிப்பாளையம் ஸ்டேஷனிலிருந்து தெற்கு 2 மைலிலும் உள்ளது. சுந்தரர் ஊர்த்தொகையில் குறித்திருக்கிறுர், சுவாமி சுக்கிரீசுவரர்; அம்மன்-ஆவுடை நாயகி; நதி-நல்லாறு. ஆலயம் பழையது, கல்வெட்டுகள் நிரம்பி இருக்கின்றன. அதிகம் இடிந்து சிகிச்சையாய் இருக்கிறது. நஞ்சராயன் குளம் ஒன்று உண்டு. குறும்பு நாடு என்று கல் வெட்டினுல் தெரியும். ஸ்தலபுராணம் உண்டென்பர் வெளி வரவில்லை.

இவையன்றி, சுப்பிரமணிய, விஷ்ணு, ஐயனர், ஜைன, புத்த, கிறிஸ்தவ ஆலயங்கள் பல புராதனமானவை இந்நாட்டில் உண்டு.

---